ஓம்

# தமிழ்ப் பாதுகாப்பு நூற்றிரட்டு



நல்ல தமிழில்
பேசவும் எழுதவும்
கற்பிப்பது



தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்
சென்னை-600 001.

முதற்பதிப்பு : மார்ச்சு 1967;
மறுபதிப்புக்கள் : ஏப்பிரல் 1970; மார்ச்சு 1973;
மார்ச்சு 1976; சூன் 1976; சனவரி 1979.



THAMIZH PAATHUKAAPPU NOORTTIRATTU

கிடைக்குமிடம் :
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.,
79, பிரகாசம் சாலை, சென்னை-1.

கிளைகள் :
திருநெல்வேலி-6. மதுரை-1. கோயமுத்தூர்-1.
கும்பகோணம்-1. திருச்சிராப்பள்ளி-2.

அப்பர் அச்சகம், சென்னை-1. (-/6)

# முன்னுரை

இதன்கண் அடங்கிய எட்டுத் தனி நூல்களில் அழைப்பிதழ் எழுதுமுறை, வடசொல் தமிழ் அகரவரிசை, பிழை நீக்கி எழுதுமுறை ஆகிய மூன்று நூல்களும், தமிழ் மக்கள் தங்கள் தாய்மொழியைப் பிறமொழிக் கலப்பின்றித் திருத்தமாகவும், பிழையில்லாமலும் எழுதுவதற்கும் பேசுவதற்கும் பெருந்துணை நல்கும்.

இவற்றுள் பழமொழி அகரவரிசை, உவமை அகரவரிசை, மரபுத்தொடர் அகரவரிசை ஆகிய மூன்று நூல்களும், அவர்கள் பேசும்போதும் எழுதும்போதும் இடத்திற்கேற்றபடி, பழமொழிகள், உவமைகள், மரபுத்தொடர்கள், அமைப்பதற்குப் பேருதவி செய்யும்.

இவற்றுள் மக்கட்பெயர் அகரவரிசை, இல்லப்பெயர் அகரவரிசை ஆகிய இரண்டு நூல்களும் அவர்கள் தங்களுடைய பிறமொழிப் பெயர்களை மாற்றித் தூய தனித்தமிழ்ச் சீரிய பெயர்களை, அமைப்பதற்கும் தங்கள் குழந்தைகட்கும் இல்லங்கட்கும் இனித் தனித்தமிழ்ப் பெயர்களை இட்டு வழங்குவதற்கும் துணைபுரியும்.

இது தமிழ்மக்கள் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டிய சிறந்த நூலாகும்.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்.

# உள்ளுறை





வெளியீடு—க

ஓம்

# அழைப்பிதழ் எழுதுமுறை

[தமிழர் சடங்கு அழைப்புத் தாள்களைத்
தனித்தமிழில் எழுதக் கற்பிப்பது]



தமிழாசிரியர் சிலரால்
பார்வையிடப்பெற்றது.



தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்
சென்னை
1974

மூன்றும் பதிப்பு : சூன் 1948.
நான்காம் பதிப்பு : திசம்பர் 1952.
ஐந்தாம் பதிப்பு : மார்ச் 1964.
ஆறும் பதிப்பு : திசம்பர் 1974.

# முன்னுரை

இதுகாறும் நந்தமிழ்நாட்டில் அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டு வரும் திருமணம், மருவீடு, சூல்காப்பிடு, காதணி, பூப்பு நன்னீராட்டு, நீத்தார் கடன் முதலிய சடங்குகளைப் பற்றிய அழைப்பிதழ்களெல்லாம் விவாஹ முகூர்த்தம், வதூகிருஹப் பிரவேசம், சீமந்த முகூர்த்தம், கர்ணபூஷணம், ருதுமங்கள ஸ்நானம், சுபஸ்வீகரணம் என்று தமிழல்லாத வடமொழிச் சொற்களால் எழுதப்பட்டு வருகின்றமை யாவரும் அறிந்ததே.

கடந்த சில ஆண்டுகளாகத் தனித்தமிழ்ப் பேராசிரியர் மறைத்திரு. மறைமலையடிகளார் பேசிய தனித்தமிழ்ச் சொற்பொழிவுகளாலும், எழுதிய தனித்தமிழ் நூல்களாலும் தமிழறிஞர்களிற் சிலர் கண் விழிப்புற்று வடசொற்களை நீக்கித் தனித்தமிழில் அழைப்பிதழ்களை எழுதி வருவாராயினர். மகா ௱-௱ ஸ்ரீ, ஸ்ரீமதி சிரஞ்சீவி, சௌபாக்கியவதி என்பன போன்ற வடசொற்களும் இப்போது ஆட்சியற்று அவற்றிற்கு நேரான திருவாளர், திருவாட்டி, திருநிறைசெல்வன், திருநிறைசெல்வி போன்ற தூய தமிழ்ச்சொற்களும் வழங்கப்பட்டு வருவவாயின.

இந்நூலின்கண் எடுத்துக்காட்டாகத் தரப்பட்டிருக்கும் பல்வகை அழைப்பிதழ்களின் துணைகொண்டும், இதனிறுதியின்கண் சேர்க்கப்பட்டிருக்கும் வடசொற் றமிழ் அகரவரிசையின் துணைகொண்டும் நந்தமிழ் மக்கள் இனித் தம் சடங்குகளின் அழைப்பிதழ்களைத் தனித்தமிழ் நடையில் எழுதுமாறு கேட்டுக்கொள்ளுகின்றோம்.

தமிழ்மொழி போற்றுமின்! தாய்மொழி போற்றுமின்!

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தார்.

உ

வள்ளிமணாளன் துணை

# திருமண மடல்

அன்பார்ந்த ஐயா,

நிகழும் திருவள்ளுவர் ஆண்டு, தைத்திங்கள், ௨௮ ஆம் நாள் (10-2-32) புதன் கிழமை காலை ௯-மணிக்குமேல் மீன ஓரையில்,

| என் மூத்த மகள்<br>திருவளர் செல்வி<br>பெண்ணினல்லாளுக்கும் | சென்னை, அருணாசல முதலியார்<br>இளைய மகனும்,<br>கண்ணப்ப முதலியார்<br>தம்பியுமாகிய<br>திருவளர் செல்வன்<br>சிவனணைந்த முதலியாருக்கும் |
|---|---|

சென்னை வண்ணாரப்பேட்டை தணிகை முதலியார் தெரு, ௯௨ ஆவது எண்ணுள்ள இல்லத்தில் திருமணமும், அன்று மாலை ௫-மணிக்கு இசைப்பாட்டும், அன்று இரவு ௮-மணிக்கு நகர்வலமும், மறுநாள் காலை ௮-மணிக்குக் காப்பவிழ்த்தலும், இடையில் எரியோம்பலும் நடைபெறும். தாங்கள் தங்கள் உறவினருடனும் நண்பருடனும் போந்து மணமக்களை வாழ்த்துமாறு வேண்டுகிறேன்.

வண்ணாரப்பேட்டை,
1—2—1932.

இங்ஙனம்,
மு. ஆறுமுக முதலியார்.

---

தங்கள் வரவை அன்புடன் எதிர்பார்க்கும் :— முருகப்ப முதலியார்

ஓம்

# திருமண அழைப்பு

திருவாளர்... .... .... .... .... ... ... ... ...அவர்களுக்கும்,

அவர்களுடைய திருநிறை மனைவியார் அவர்களுக்கும்.

அன்புடையீர் !

எங்கள் மகன்

செல்வன் தெ. நெல்லையப்பனுக்கும்

திருநெல்வேலி திரு. மு. திருமலைப்பிள்ளை அவர்கள் மகள்
செல்வி வடிவுடையம்மைக்கும்

1098ஆம் ஆண்டு ஆவணித்திங்கள் 25ஆம் நாள் வெள்ளிக் கிழமை இரவு ௪௬ நாழிகைக்குமேல் விடியுமுன் (10-9 29 விடியற் காலம் 4-30 மணிக்குமேல் 6-மணிக்குள்) திருப்பரங்குன்றம் மெய் கண்டார் திருமடத்தில் திருமணம் நடைபெறும்.

அன்று தாங்கள் இருவரும் தமருடன் வந்து மணத்தைச் சிறப்பிக்க வேண்டுகின்றேம்.

தங்கள் அன்புள்ள,

மதுரை,
1—9—1929.

தெய்வ நாயகன்
தில்லை நாயகி.

---

தங்கள் வரவை அன்புடன் அவாவும் :—

மணமகளின் பாட்டனுர் முத்துவேல் பிள்ளை.

உ.

திருச்சிற்றம்பலம்

## மன்றல் அழைப்பிதழ்

அன்புமிக்கீர் !

எல்லாம்வல்ல சிவபெருமான் திருவருளினலே, நிகழும் ஈசுவர ஆண்டு ஆவணித்திங்கள் 25ஆம் நாள் (9-9-37) வியாழக்கிழமை சுவாதி நன்னுள் கூடிய துலா ஓரையில், காலை 8-30 மணிக்குமேல் 10 மணிக்குள்ளாக,

| | |
|---|---|
| என் இளைஞன்<br>செ. உமையொருபாகம் பிள்ளை<br>அவர்கள் மூத்த மகள்<br>திருவளர் செல்வி<br>**முத்தம்மைக்கும்** | பெங்களூர் சப் ஓவர்சியர்<br>அ. சிங்காரவேலுப்பிள்ளை<br>அவர்கள் இரண்டாம் மகன்<br>திருவளர் செல்வன்<br>**பெரியண்ணனுக்கும்** |

சென்னை, மயிலாப்பூர் பெரிய தெரு (ஹைரோடு), 21 ஆம் எண்ணுள்ள இல்லத்தில் நடக்கும் திருமணச் சடங்கிற்கும் அன்று மாலை 5-மணிக்கு நடக்கும் இசைப்பாட்டுக்கும், மறுநாள் வெள்ளிக்கிழமை காலை 9 மணிக்கு நடக்கும் காப்புக்களைதலுக்கும், இடையில் நடக்கும் விரியோர்பலுக்கும் தாங்கள் தங்கள் இல்லக்கிழத்தியோடும் உற்ருர் உறவினர் நட்பினரோடும் முன்னடியாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தி இன்புறுமாறு கோருகின்றனன்.

வேலூர்,
1—9—1937

இங்ஙனம் தங்கள் அன்புள்ள,
செ. உலகநாத பிள்ளை

௺

ஓம் சிவம்

# திருமண அழைப்பு

''மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு''

அன்பிற் சிறந்த ஐயா,

எல்லாம்வல்ல அம்மை யம்பலவாணர் திருவருளால் நிகழும் தாது யாண்டு வைகாசித் திங்கள் 18ஆம் நாள் (31-5-36) ஞாயிற்றுக் கிழமை காலை, ஞாயிறு தோற்றத்திலிருந்து 2-30 நாழிகைக்குள்ளாக நன்னாளில் (காலை 6 மணியிலிருந்து 7 மணிக்குள்)

| | |
|---|---|
| என் இளைய மகன் | பறங்கிமலை |
| திருநிறை செல்வன் | திரு. அப்பன் செட்டியாரின் மூன்றும் மகள் திருநிறை செல்வி |
| அம்பலவாணனுக்கும் | சிவகாமியம்மைக்கும் |

திருமணம் நிகழ்த்த உறுதி செய்யப்பட்டிருத்தலால், தியாகராய நகர் பொதுநெறிக்கழக நிலையத்தின் மேன்மாளிகையில் அம்பலவாணர் திருக்கோயிலின்முன் சிவனணைந்த அடிகளால் தமிழ் மாமறை கொண்டு தனித்தமிழ் முறையில் நடத்தப்படும் அத் திருமணத்திற்கும், அன்று மாலை 5 மணிக்கு உண்டாட்டிற்கும், திருநெல்வேலித் தமிழிசைவாணர் திருவாளர் சுந்தர ஓதுவாமூர்த்தியவர்களால் நடத்தப்படும் தேவார இசையரங்கிற்கும், தாங்கள் தங்கள் குடும்பத்தினருடன் வந்திருந்து மணமக்களை வாழ்த்துமாறு மிகப் பணிவுடன் வேண்டுகின்றனன்.

சென்னை,
20—5—1936

இங்ஙனம்,
அ. முத்தைய செட்டியார்

குறிப்பு :—மணமக்கட்கு எத்தகைய பரிசும் எவரும் கொண்டு வராதிருக்கும்படி கோருகிறேன்.

உ

# திருமணத் திருமுகம்

திருச்சிற்றம்பலம்

மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல்ல கதிக் கியாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வள நகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே.

அன்புநிறை ஐயா,

அன்பின்வடிவும் இன்பப்பிழம்புமாக விளங்கும் அம்மையப்பர் திருவருளைத் துணைகொண்டு நிகழும் தாதுவாண்டு வைகாசித்திங்கள் 18ஆம் நாள் (31-5-36) ஞாயிற்றுக் கிழமை, ஏகாதசி, அத்தம் இவை கூடிய நன்னாளில், பகல் 15 நாழிகைக்குமேல் 18½ நாழிகைக்குள் கன்னி ஓரையில்,

| | |
|---|---|
| என் இளைய மகள்<br>திருவளர் நங்கை<br>செல்லம்மாளை | திருச்சிராப்பள்ளி, திருவாளர்<br>பொன்னம்பலம் பிள்ளை<br>அவர்கள் இளைய மகன்<br>திருவளர் நம்பி புலவர்<br>மணிமொழிக்கு |

வாழ்க்கைத் துணைவியாக்க ஆன்றோர்களால் உறுதி செய்யப்பெற்ற வண்ணம். திருச்சி பெரிய ஆண்டார் தெரு, 50ஆவது எண்ணுள்ள மாளிகையின்கண் நடைபெறும் திருமணத்திற்கும், அதன் தொடர்புடைய சிறப்பு நிகழ்ச்சிகட்கும் தாங்கள் சுற்றஞ் சூழ எழுந்தருளி மணமக்களை வாழ்த்தியருள வேண்டுகின்றேன்.

திருச்சி,
22—5—1936

இங்ஙனம் தங்களன்புள்ள
க. அம்பலம் பிள்ளை

ஓம் சிவம்

# திருமண அழைப்பு

அன்பு மிக்க ஐயா,

நிகழும் வெகுதானிய ஆண்டு ஆவணித் திங்கள் 17 ஆம் நாள் (1-9-1938) வெள்ளிக்கிழமை காலை 9 மணியிலிருந்து 10-30 மணிக்குள்ளாக,

---

திருமயிலாப்பூர்
திருவாளர் ஆவுடையப்ப பிள்ளையவர்களின் மகனாரும்,
தென்னிந்திய தமிழ் நூற்பதிப்புக் கழக அமைச்சருமாகிய

**திருவளர்செல்வர் ஆ மதியழகு பிள்ளையவர்களுக்கும்**

சைதாப்பேட்டை,
நமச்சிவாயம் பிள்ளையவர்களின் மகளாரும்,
சென்னைக் கிறித்தவ மகளிர் கல்லூரித்
தமிழாசிரியருமாகிய திருமகள்

**அங்கயற்கண்ணியம்மையார்க்கும்**

---

சென்னை, திருமயிலாப்பூர்ச் சிவபிரான் திருக்கோயிலில் திருமணம் நடத்துவதாகப் பெரியோர்களால் உறுதி செய்யப்பட்டிருத்தலால், அத் திருமணத்திற்குத் தாங்கள் தங்கள் உறவினர் நண்பர்களுடன் வந்திருந்து மணமக்களை வாழ்த்துவதோடு, அன்று மாலையில் சென்னை காசிச் செட்டித் தெரு 82 ஆவது எண் மாளிகையில் நடத்தப்படும் தேவார இசையரங்கிற்கும் வந்திருந்து கேட்டுத் திருமணத்தைச் சிறப்பிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
**இராமலிங்கம் பிள்ளை**
அட்வகேட், சென்னை.

சென்னை-1
25—8—1938

திருமால் திருவடி துணை

# திருமணம்

அன்புடைப் பெருந்தகையீர்!

கண்ணபிரான் திருவருளை முன்னிட்டு நிகழும் விபவ சித்திரை 14 ஆம் நாள் (26-4-28) வியாழக்கிழமை காலை 10-30 மணிக்கு,

என் இளைய மகள்

திருவளர்செல்வர் **பொன்னம்மையை**

சேத்துப்பட்டுத் திரு. கன்னைய நாயுடு அவர்கள்
இளைய மகன்

திருவளர் செல்வன் **நல்லபெருமாளுக்கு,**

திருவல்லிக்கோணி, பார்த்தசாரதி கோயிலில் திருமணம் செய்து கொடுக்க உறுதி செய்திருப்பதால், அப்பொழுது தாங்கள் தங்கள் அன்பர்களுடன் வந்திருந்து அதனைச் சிறப்புற நடத்துமாறு வேண்டுகின்றேன்.

பின்னர் அடையாறு பெரிய தெருவிலுள்ள தமிழகத்திற்கு ஊர் வலமாகச் செல்லுதல்.

இசைப்பாட்டு : வியாழன் 5-30 மணி.

திருமயிலை,
20—4—1928

இங்ஙனம் தங்கள் அன்புள்ள
செ. சின்னப்பன்

ஓம்

திருவருள் துணை

# மருவீடு அழைப்பு

அன்பு நிறைந்த ஐயா,

அம்மையப்பர் அருளால் நிகழும் மெய்கண்டான் யாண்டு எஎகசு-தாது ஐப்பசித் திங்கள் 2ஆம் நாள் (18-10-36) புதன் கிழமை அத்த நாள் முற்பகல் எ நாழிகைக்கு மேல் கக நாழிகைக்குள் (மணி$8\frac{1}{2}$-$10\frac{1}{4}$) தனுசு நற்பொழுதில்,

| | |
|---|---|
| என் மகன் | பெருங்குளம் திரு சங்கரநாராயண பிள்ளை அவர்களின் இளைய மகள் |
| மணாளன் | மணாட்டி |
| செ. முத்தைய பிள்ளை | வேலம்மையுடன் |

ஆழ்வார் திருநகரி சாலைத்தெருவில் அமைந்துள்ள எனது வீட்டில் 'மரு அழைக்க' ஆன்றோர் அருளலின், அன்று காலை நடைபெறும்

மரு அழைப்பிற்கும், அன்றிரவு 8 மணிக்குமேல் நடைபெறும் ஊர்வலத்திற்கும் தாங்கள் உற்றார் உறவினர்களுடன் வந்திருந்து சிறப்பித்து மணமக்களை வாழ்த்திடுமாறு வேண்டுகிறேன்.

ஆழ்வார் திருநகரி,
12—10—1936

தங்கள் அன்பன்,
மு. செல்லம் பிள்ளை

ஓம்சிவம்

## நூல் காப்பீடு விழா அழைப்பு

அன்பு சான்ற ஐயா,

எல்லாம்வல்ல இறைவன் திருவருளை முன்னிட்டு, நிகழும் வெகுதானிய ஆண்டு, ஆடித்திங்கள் 17ஆம் நாள் (1-8-38) வியாழக்கிழமை மகமீனும் கன்னி ஓரையும் கூடிய நன்னாளில், காலை 8 நாழிகைக்குமேல் 13 நாழிகைக்குள் (மணி 9-11)

---

என் அருமைத் திருமகன்
திருவளர் செல்வன் ஆறுமுகம் பிள்ளையின் மனைவி
திருவளர் செல்வி

மங்கையர்க்கரசிக்கு

---

நூல்காப்பிடப் பெரியோர்களால் உறுதி செய்யப் பெற்றவண்ணம் திருமயிலாப்பூர் செல்வப் பிள்ளையார் தெரு, ஏழாம் எண்ணுள்ள வீட்டில் நடைபெறும். அந் நிகழ்ச்சிக்குத் தாங்கள் தங்கள் உறவினர் நண்பர்களுடன் முன்னரே வந்திருந்து சிறப்பிக்குமாறு வேண்டுகின்றனன்.

திருமயிலாப்பூர்,
25—7—1938

தங்களன்பன்,
ஆ. அம்மையப்பன்

உ

# புதுமை அழைப்பு

அன்பார்ந்த ஐயா,

பொன்னம்பலவன் திருவருளே துணைகொண்டு நிகழும் திருவள்ளுவர் ஆண்டு ௧௯௬௯ ஆவணித்திங்கள் 10ஆம் நாள் (25-8-1938) ஞாயிற்றுக்கிழமை காலை 10½ மணிக்கு

என்னுடைய மூத்த மகன்
திருவளர் செல்வன்

## வயிரமுத்துக்கு

நடைபெறும் காப்புக் கட்டும் புதுமைக்குத் தங்கள் நல்வரவைப் பெரிதும் எதிர்பார்க்கின்றேன்.

வயி. பெ. வீடு
கானாடுகாத்தான்,
17—8—1938

தங்களன்புள்ள,
வயி. பெ. பழனியப்ப செட்டியார்

---

தங்கள் வரவை விரும்பும் :—வயி. பெ. இராமன் செட்டியார்.

ஓம்சிவம்
அம்மையப்பர் துணை

# காதணி அழைப்பிதழ்

அன்புடையீர் !

நிகழும் வெகுதானிய ஆண்டு வைகாசித்திங்கள் 20ஆம் நாள் (2-6-38) வியாழக்கிழமை காலை 9 மணிக்குமேல் 12 மணிக்குள்ளாக, என்னுடைய பேரனும், இரங்கூன் இந்தியன் அச்சுக்கூட உரிமையாளர் அ. சுப்பையா முதலியார்,

தவச்சிறுவனுமாகிய
திருவளர் செல்வன்

## திருநாவுக்கரசுக்கு

திருக்கழுக்குன்றத்துக் கடுத்த வடகரை என்னும் சிற்றூரின்கண் பூங்காவனத்தம்மை கோயிலில் நடைபெறும் காதணிச் சடங்கிற்கும்,

அன்று மாலை நடைபெறும் இறைவழிபாட்டிற்கும் தாங்கள் தங்கள் உறவினர் நண்பருடன் வந்திருந்து செல்வச் சிறுவனை வாழ்த்து மாறு கேட்டுக் கொள்கிறேன்.

தியாகராய நகர், }
26—5—1938 }

இங்ஙனம்,
வண்டலூர் செல்லப்ப முதலியார்

ஓம்

# பூப்பு நன்னீராட்டு விழா

அன்புடைப் பெரியீர்!

அங்கயற்கண்ணி அமர் அரன் அருளால்
என்னுடைய தலைமகள்
திருவளர் செல்வி
**மீனக்கண்ணி**

நிகழும் வெகுதானிய சித்திரைத்திங்கள் 4ஆம் நாள் (16-4-38) சனிக்கிழமை நண்பகல் 2 மணிக்குச் சிங்க வோரையும் விசாக நாளுங் கூடிய நல்வேளையில் பூப்பு எய்தினள்.

நாளது சித்திரை 11ஆம் நாள் (23-4-38) திங்கட்கிழமை காலை 9 மணிக்குமேல் 11 மணிக்குள் மிதுன வோரையும் சதய நாளுங் கூடிய நற்பொழுதில் புதுக்கோட்டை பெருமாள் வடக்குத் தெரு, புலவரகத்தில் பூப்பு நன்னீராட்டு விழா நடத்தப்பெறும்.

அவ்விழாவுக்கும் அதை யடுத்து நடக்கும் இசை யரங்கு முதலிய சிறப்புகட்கும், தாங்கள் தங்கள் உற்றார் உறவினருடன் முன்னதாக வந்து சிறப்பித்தருள அன்புடன் வேண்டுகின்றேன்.

புலவரகம். }
18—4—1938 }

இங்ஙனம்,
புலவர் மணவழகன்

உ

வேலு மயிலுந் துணை

# நீத்தார் கடன்

அன்புள்ள ஐயா,

நிகழும் பவ ஆண்டு கார்த்திகைத் திங்கள் 21ஆம் நாள் (6-12-1934) வியாழக்கிழமை அன்று பகல் 3½ மணிக்குச் சிவபரம் பொருளின் திருவடிப்பேறெய்திய எங்கள் தந்தையார். புதுவை வெ. ஆறுமுக முதலியாரவர்கட்கு நாளது பவ ஆண்டு, மார்கழித்திங்கள் 4ஆம் நாள் (19 12-34) புதன் அன்று, நிகழ்ச்சி நிரலிற் கண்டபடி நடைபெறும் சமாதி வழிபாட்டிற்கும், சொற்பொழிவுகட்கும், தலைகட்டலுக்கும், இரங்கற்பா அரங்கேற்றற்கும் தங்கள் வருகை வேண்டப்படுகின்றது.

தங்கள் அன்புள்ள,

சென்னை,
15—12—1934

புதுவை பொன்னம்பலம்
புதுவை மாணிக்கம்

உ

வேலு மயிலுந் துணை

# நீத்தார் கடன்

அன்பு கெழுமிய ஐயா,

யுவ ஆண்டு பங்குனித்திங்கள் 1ஆம் நாள் வெள்ளிக்கிழமை (13-3 36) மாலை 6 மணிக்குச் சிவபிரான் திருவடி நீழலை யடைந்த என் தமையனார் தமிழ்ப் பேராசிரியர், அ. வடிவேலு முதலியாரவர்களுக்குப் பங்குனித் திங்கள் 17ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை (29-3 36) காலை வேப்பேரி அன்பகத்தைச் சார்ந்த பூந்தோட்டத்தில் நடைபெறும் சடங்குகட்கும். உடனே நிகழும் தலைக்கட்டிற்கும், மாலை 4-15 மணிக்கு அன்பகத்தில் நடக்கும் சொற்பொழிவுகட்கும் தங்கள் வருகையைப் பெரிதும் விரும்பும்.

வேப்பேரி,
22—3—1936

அன்பன்,
அ. நெல்லையப்பன்

---

தங்கள் வருகையை எதிர்நோக்கும் :—அ. இலமுருகு முதலியார்.

கண்ணபிரான் துணை

# நீத்தார் கடன்

அன்பு நனிமிக்க ஐயா !

1938ஆம் ஆண்டு மேத்திங்கள் 21ஆம் நாள், காலஞ்சென்ற என்னுடைய கணவர் திரு. கா திருமலை நாயுடு அவர்களின் பிரிவுக்குரிய இறுதிச் சடங்குகள் (ஆத்திய சிரார்த்தம்) என்னுடைய இல்லத்தில் (70, சிங்காரத் தெரு, இராயப்பேட்டை, சென்னை) ஞாயிற்றுக்கிழமை சூன் திங்கள் 7 ஆம் நாள் காலை 8 30 மணிக்கு நடைபெறும். தாங்கள் பிரிந்த உயிரின் அமைதிக்காக நடைபெறும் வழிபாடுகளிற் கலந்து கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

சென்னை,
2—6—1938

தங்களன்புள்ள,
ஆண்டாள்

ஓம்

# தஞ்சைத் தமிழர் கழகம்

## இருபத்திரண்டாவது ஆண்டு நிறைவு விழா

தமிழன்பரீர் !

நிகழும் திருவள்ளுவர் ஆண்டு ௧௯௬௮, ஈசுவர மார்கழித்திங்கள் ௧0, ௧௧, ௧௨ ஆம் நாட்கள் (1937 டிசம்பர் 24, 25, 26) ஆகிய வெள்ளி, சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் இக் கழகத்தின் இருபத் திரண்டாவது ஆண்டு விழா மறைத்திரு மறைமலை அடிகளார் தலைமையில் இக்கழகக் கட்டிடத்தில் பின்பக்கத்திலுள்ள நிகழ்ச்சிக் குறிப்பிற் கண்டபடி நிகழும்.

ஆண்டு விழாவின் முதனாளாகிய வெள்ளிக்கிழமையன்று, உலகப் பெரும்புலவர் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப்பெறும்.

தவத்திரு. இன்பவேள் அடிகள், தமிழ்க் கொடியினை ஏற்றிவைக்கவும் தவத்திரு. அழகர் அடிகள் விழாப் பேரவையைத் திறந்து வைக்கவும், தவத்திரு இளங்கோவடிகள் திருவள்ளுவர் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கவும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

தாங்கள் தமிழன்பர் பலருடன் வந்திருந்து மதிநுட்பம் நூலோ டுடைய அறிஞர் சொற்பொழிவுகளைக் கேட்டு இன்புறவும் விழாவினைச் சிறப்பிக்கவும் வேண்டுகின்றேன்.

தஞ்சை,
15—12—1937

தங்களன்புள்ள,
பொன்னையா பிள்ளை,
கழக அமைச்சர்

## அழைப்பிதழ்களில் வழங்கிவருகின்ற

## வடசொல்—தமிழ் அகரவரிசை

அக்கிராசனம் · தலைமை
அக்கிராசனாதிபதி · அவைத் தலைவர்
அசுபம் தீமை, தீங்கு
அநுக்கிரகம் அருள்
அந்தியேட்டி · இறந்தபின் செய்யுஞ் சடங்கு
அப்தம் · அண்டு
அமரபக்ஷம் தேய்பிறை
ஆசீர்வதிக்க வாழ்த்த
ஆதிவாரம், ஆதித்தவாரம்- ஞாயிற்றுக்கிழமை
ஆப்திகம்- தலை ஆண்டு நிறைவு
ஆலயம்-கோவில
இலக்கினம் ஓரை, பொழுது
இஷ்டன் · நண்பன்
ஈசுரன் இறைவன், கடவுள்
உதயாதி விடியற்காலை
உத்தரகிரியை இறந்தபின் செய்யுஞ் சடங்கு
உபசரிப்பு பணிவிடை, முகமன்
உபநயனம் பூணூல் சடங்கு
உபந்நியாசம சொற்பொழிவு
உபயகுசலோபரி இருபாலும் நலமுண்டாகுக
உபயக்ஷேமம் இருபாலும் நலம்
உபயக்ஷேமோபரி இருபாலும் நலமுண்டாக
உபயத்ர குசலம் இருபக்கமும் நலம்
உபயம்-இரண்டு
ஔபாசனம்-எரியோம்பல், வேள்வித் தீ யோம்புகை
கங்கண விசர்ஜனம்-காப்ப விழ்த்தல், காப்புக்களைதல்
கருமாதி-இறந்தபின் செய்யும் இறுதிச் சடங்கு
கர்ணபூஷணம்-காதணி
கலியாணம்-திருமணம்
கனிஷ்டன்-இளையவன், இளையோன்
கன்னிகாதானம் மணஞ் செய்து கொடுத்தல், பெண்ணைக் கொடுத்தல்
கிருகம் (கிருஹம்) இல்லம், வீடு
கிருகப்பிரவேசம் வீடுபுகுதல், வீடு நுழைவு
கிரியை · சடங்கு
கிருஷ்ணபக்ஷம்-தேய்பிறை
கிருபை · அருள
குமாரத்தி-மகள்
குமாரன்-மகன்
குருவாரம் வியாழக்கிழமை
கும்பாபிஷேகம் குடமுழுக்கு
கௌரவப்படுத்த பெருமைப் படுத்த
சகல எல்லாம்
சகிதம் உடன், ஒடு
சகோதரன் உடன் பிறந்தான், தமையன் தம்பி
சகோதரி உடன்பிறந்தாள், தமக்கை தங்கை
சங்கீதகச்சேரி இசைப்பாட்டு, இசையரங்கு
சதாபிஷேகம நூற்றாண்டு முழுக்கு (எண்பதாம் ஆண்டு நிறைவில் நடைபெறுவது)
சந்நிதி திருமுன்
சஷ்டியப்த பூர்த்தி · அறுபதாம் ஆண்டு நிறைவு

சபா நாயகர்-அவைத்தலைவர்
சபை-அவை
சமர்ப்பித்து-அன்புடன்வைத்து
சமேதராய் உடன், ஒடு
சாக்ஷாத் எல்லாம்வல்ல
சாந்தி முழுக்கு
சிகை-முடி
சிரஞ்சீவி-திருநிறை செல்வன், நெடிது வாழ்வோன், நீடு வாழ்வோன்
சிரார்த்தம்-இறந்தார் ஓரையிற் செய்யுஞ் சடங்கு
சிவபதம்-இறைவனடி, திருவடி நீழல்
சீமந்தம் சூல்காப்பிடுஞ் சடங்கு, வளைகாப்புச் சடங்கு
சுக்கிரவாரம்-வெள்ளிக் கிழமை
சுக்கிலபக்ஷம்-வளர்பிறை
சுபதினம்-நன்னாள்
சுபமஸ்து-நலமுண்டாக
சுபம் நன்மை, நலம்
சுபஸ்வீகரணம்-தீத்தார்கடன், தீட்டுக்கழிவு நன்மைகொள் சடங்கு
சுவஸ்தி நன்மையுண்டாக
சுவாமிகள் அடிகள்
ஜேஷ்டன் மூத்தோன், தலைமகன்
சௌபாக்கியவதி-திருநிறை செல்வி
சோபனம் நன்மை
சோமவாரம திங்கட்கிழமை
ஜன்ம நட்சத்திரம்-பிறந்த நாள்
க்ஷேமம்-நலம்
ஜனங்கள்-மக்கள்
ஸ்நானம் முழுக்கு
ஸ்வீகாரம் தத்து எடுத்தல், பிள்ளை கூட்டுதல்
தசாஹம் இறந்த பத்தாம் நாட் சடங்கு
தம்பதிகள்-மணமக்கள்
தர்மபத்தினி-மனைவி
திதி ஓரை
திவிதீயகுமாரன்-இரண்டாவது மகன்
தினம் நாள்
திருமங்கிலிய தாரணம்-திரு நாண் பூட்டு
நமஸ்காரம்-வணக்கம், கும்பிடு
நட்சத்திரம்-நாள், மீன்
நிச்சயித்து-உறுதிசெய்து, தீர்மானித்து
நிச்சயதாம்பூலம் மணவோலை எழுதல், வெற்றிலை கைம் மாறறல்
நிச்சயதார்த்தம்-முடிவுகட்டுதல்
பட்டணப்பிரவேசம் நகர்வலம், ஊர்வலம்
பத்திரிகை-இதழ், மடல், திரு முகம் அழைப்பு தாள்
பந்து-உறவினர், உற்றூர், தமர், குடும்பத்தார்
பாணிக்கிரகணம்-கைப்பற்றல், கைப்பிடி
பாரியாள் மனைவி
பானுவாரம் ஞாயிற்றுக்கிழமை
பிரகஸ்பதி வாரம் வியாழக் கிழமை
பிரசங்கம் சொற்பொழிவு, விரிவுரை
பிரதிஷ்டை-கோவில்கொள்ளு வித்தல், நிலைபெறுத்தல் நன்கு நிறுத்தல்
பிரார்த்திக்கின்றனன் கோரு கின்றனன், வேண்டுகின்றனன்
புஷ்பிணி பூப்பெய்தியவள்
புத்திரன்-மகன்,
புத்திரி-மகள்,
பும்சவனம் சூல்கொண்டார் ஆண்மகவை வேண்டிச் செய்யும் சடங்கு
பூர்வபக்ஷம்-வளர்பிறை

பௌத்திரன்-பேரன்
பௌத்திரி-பேர்த்தி
பௌர்ணமி-முழுநிலா
மகா ள-ள-ஸ்ரீ திருவாளர்,
பெருமை தங்கிய
மங்களவாரம் செவ்வாய்க்கிழமை
மாதாபிதா-தாய்தந்தை
மித்திரன்-நண்பன், நட்பினன்
முகூர்த்தம்-நாழிகை, நேரம்
யோகம்-கூட்டம்
ருதுமங்கள ஸ்நானம்-பூப்பு
நன்னீராட்டு
வருடம்-ஆண்டு
வருடாப்திகம்-ஆண்டு நிறைவு
வதூ-மணமகள்
வதூகிருகப்ரவேசம்-மருவீடு
வதூவரர்-மணமக்கள்
விகிதர்-நட்பாளர்
விஜயஞ்செய்து-வந்திருந்து,
ீபாந்து
விசேடம்-சிறப்பு
விஞ்ஞாபனம் வேண்டுகோள்
விவாக முகூர்த்தம்-திருமண
வேளை
வித்தியாரம்பம்-பள்ளிக்கு
வைத்தல், கல்வி தொடங்கல்
விவாகம் மணம், மன்றல
விதேயன் நண்பன், அன்பன்,
அடியார்க்கடியன்
வைகுண்டபதவி திருமால் திரு
வடி, கண்ணன் கழலடி
வைபவம்-நிகழ்ச்சி

தமிழ்ப் பாதுகாப்புக் கழக வெளியீடு :

ஓம்

# வடசொல் தமிழ்

# அகரவரிசைச் சுருக்கம்

[வடசொற் கலப்பின்றிப் பேசவும் எழுதவுங் கற்பிப்பது]




தனித்தமிழ்ப் பேராசிரியர்
மறைமலையடிகளாரின் மகளாரும்
சென்னை நார்த்விக் மகளிர் கல்லூரித்
தமிழாசிரியரா யிருந்தவருமாகிய

**திருவாட்டி தி. நீலாம்பிகையம்மையார்**

இயற்றியது





கிடைக்குமிடம் :

**திருநெல்வேலி, தென்னிந்திய**
**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,**
79, பிரகாசம் சாலை, சென்னை - 1

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

1978

7 ஆம் பதிப்பு : மே 1969;
8 ஆம் பதிப்பு : அக். 1975;
9 ஆம் பதிப்பு : ஆக. 1978.

# முகவுரை

சென்ற எழுநூறு எண்ணூறு ஆண்டுகளாக நம் தாய்மொழியாய செந்தமிழ்ச் சீரிய மொழியில் ஏராளமான வடசொற்கள் வந்து கலந்துவிட்டன. ஐயகோ! இதனாலேயே பழந் தமிழ்ச் சொற்களில் பல வழங்கா தொழிந்தன. தமிழிற் கலந்து அதனை முற்றும் வேறுபடுத்தும் வடசொற்களை இப்போதே நாம் களைந்தொழிக்காவிடின் தமிழ் தன் நிலைகெட்டு வேறுமொழிபோ லாகுமென்பதற்கு ஐயமில்லை. இங்ஙனம் வேற்றுமொழிக் கலப்பால் தமிழ்மொழி திரிபுற்றமையினாலேதான் அஃதொன்றிலிருந்தே 'மலையாளம்', 'கன்னடம்', 'தெலுங்கு' முதலான பல வேறு மொழிகள் கிளைத்தன.

இக்காலத்துத் தமிழ்மக்களிற் பெருந்தொகையினர் வடசொற்களையுந் தமிழ்ச்சொற்களையும் பிரித்தறிய முடியாதவர்களாகித் தாம் எழுதுவதிலும் பேசுவதிலும் வடசொற்களை மிகைபடக் கலந்து எழுதியும் பேசியும் தமிழின் தூய்மையையும், இனிமையையும், பழைமையையுங் கெடுத்து வருகின்றனர்.

என் இளமைக்காலத்தே என் அருமைத் தந்தையார் மறைமலையடிகளாரிடம் கல்வி பயின்றமையால், வடசொற் கலப்பினால் தமிழ் தன் நிலைதிரிந்து கேடுறுவதை யான் அறிந்து வருந்தலானேன். அதுமுதல் வடசொல் தமிழ்ச்சொற்களை ஆராய்வதில் ஈடுபட்டு, 'வடசொற் றமிழ் அகரவரிசை' என்னும் நூலை இயற்றி ௨௯௨ பக்கங்களில் சென்ற ஆண்டில் அச்சிட்டு வெளியிட்டுள்ளேன்.

இப்போது பேச்சுவழக்கில் மிகைபட வழங்கிவரும் ஓராயிரம் வடசொற்களைமட்டும் எடுத்து இச் சுருக்க நூலைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழக வெளியீடாக வெளிப்படுத்துகின்றேன். மிகவும் எளிய விலைக்குக் கிடைக்கப்பெறும் இவ்வரிய நூலைப் பெற்று இனி இயன்றவரை தனித் தமிழில் எழுதவும் பேசவும் பழகிக் கொள்ளுமாறு தமிழ்நன்மக்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

பாளையங்கோட்டை,
18—9—1938

தி. நீலாம்பிகை

ஓம்

# வடசொல் தமிழ்

# அகரவரிசைச் சுருக்கம்

அகங்காரம் - செருக்கு, இறுமாப்பு; முனைப்பு; யானெனல்.
அகசுமாத்து, அகஸ்மாத்து - தற்செயல்; திடீரெனல்.
அகதி - வறியன்; யாருமற்றவன்.
அகந்தை - இறுமாப்பு; செருக்கு.
அகம்பாவம் - தற்பெருமை; செருக்கு; ஆணவம்.
அகராதி - அகரவரிசை.
அகற்பிதம் - இயல்பு.
அகாதன் - புரட்டன்.
அகாலமரணம் - முதிராச்சாவு.
அகாலம் - தகாக்காலம்.
அகிம்சை - இன்னா செய்யாமை; கொல்லாமை.
அகிலம் - எல்லாம்; உலகு; வையம்; நிலம்.
அகோசரம் - அறியொணாதது.
அகோரம் - சினக்குறிப்பு; நடுக்கம்.
அகோராத்திரம் - அல்லும்பகலும்.
அக்காரம் - வெல்லம்.
அக்கி - கண்; கொப்புளம்.
அக்கிரகாரம் - பார்ப்பனச்சேரி.
அக்கிரமம் - ஒழுங்கின்மை; முறைகேடு.
அக்கிராசனம் - முதலிருக்கை; தலைமை.
அக்கிராசனாதிபதி - அவைத் தலைவர்; முதல்வர்.
அக்கினி - நெருப்பு; தீ; அனல்; எரி; தழல்.
அக்கினிகாரியம் - எரியோம்பல்.
அக்கினி நட்சத்திரம் - தீ நாள்.

அங்க சேட்டை - உறுப்பு அசைவு.
அங்கம் - உறுப்பு; எலும்பு; அடையாளம்.
அங்கவீனன் - உடற் கேடன்; உறுப்பறையன்.
அங்கீகரணம், அங்கிகாரம் - உடன்பாடு; ஒப்பு.
அங்குசம் - யானைத் தோட்டி; தொரட்டி.
அங்குட்டம் - பெருவிரல்.
அங்குலம் - விரற்கடை; விரலளவு.
அசந்தர்ப்பம் - நேரமின்மை; காலத்தவறு.
அசமந்தம் - சோம்பல்; மடி; மந்தம்.
அசரீரி - உருவற்றது; வானொலி.
அசம் - ஆடு.
அசல் (இந்துஸ்தானி) - முதல்; மூலம்.
அசாக்கிரதை - விழிப்பின்மை; கருத்தின்மை; அசட்டை.
அசாத்தியம் - அருமை; முடிக்கக் கூடாதது.
அசீரணம் - பசியின்மை; செரியாமை.
அசுத்தம் - அழுக்கு; துப்புரவின்மை; தூய்மையின்மை,
அசுபம் - நன்மையல்லாதது; தீமை; தீயது.
அசுவம் - குதிரை.
அஞ்சனம் - மை; கருப்பு.
அஞ்ஞாதம் - மறைவு.
அஞ்ஞாதவாசம் - மறைந்துறைதல்.

அஞ்ஞானம் - அறியாமை; இருள்; மருள்.
அட்சரம் - எழுத்து.
அட்டகம் - எண்வகை.
அட்டகாசம் - புரளி.
அணிமா - அணுத்தன்மை.
அதிகம் - மிகுதி.
அதிகாந்தம் - பேரழகு.
அதிகாரம் - இயல்; நூற்கூறுபாடு; ஆட்சி.
அதிகாரி - தலைவன், முதல்வன்.
அதிசயம் - புதுமை; வியப்பு.
அதிட்டம் - செல்வம்; நல்வினைப் பயன்; நன்னுகர்ச்சி.
அதிதி - விருந்தினன்; புதியவன்.
அதோகதி - கீழிறக்கம்; பள்ளம்.
அத்தமனம், அஸ்தமனம் - சாய்ங் காலம்; மாலை; மறைவு; அடைவு.
அத்தம், அஸ்தம் - கை.
அத்தி, அஸ்தி - எலும்பு.
அத்திபாரம், அஸ்திபாரம் - அடிப் படை; கடைக்கால்.
அத்தியட்சன் - தலைவன்; கண் காணி
அத்தியந்தம் - மிகுதி, மட்டற் றது.
அத்தியாயம் - பலம்; நூற்பிரிவு.
அத்திரம், அஸ்திரம் - அம்பு.
அத்துவிதம் - இரண்டற்றது.
அநந்தம் - அளவின்மை; முடி வல்லது.
அநர்த்தம் - பயனின்மை; கேடு; மாறுபாடு.
அநவரதம் - எப்பொழுதும்.
அநாகதம் - நெஞ்சம்.
அநாதி - முன்; பழைமை; கடவுள்.
அநாதை - யாருமற்றவன்.
அநியாயம் - முறையின்மை; நடு வின்மை; விலக்கு.
அநிருதம் - பொய்.
அநீதி - முறைகேடு.
அநுகூலம் - கைகூடுதல்; பயன்; உதவி. நன்மை; துணை.
அநுக்கிரகம் - அருளிரக்கம்; அருள்.
அநுசரித்தல் - பின்பற்றல்; கைக் கொள்ளல்.
அநுட்டானம் - செயற்பாடு; நடை முறை
அநுட்டித்தல் - பின்பற்றல்.
அநுதினம் - நாடோறும்.
அநுபந்தம் - பின்சேர்க்கை; தொடர்ச்சி; அடுத்து யாக்கப் படுவது.
அநுபவம் - பழக்கம்; நுகர்ச்சி; அழுந்தியறிதல்.
அநுபவித்தல் - துய்த்தல்; நுகர் தல்; துவ்வல்.
அநுபானம் - துணைமருந்து; கூட்டு மருந்து.
அநுபோகம் - பழக்கம்; வழக்கம்; ஆட்சி; நுகர்ச்சி; துய்ப்பு.
அநுமதி - உடன்பாடு; விடை; கட்டளை; ஆணை; ஒப்புதல்.
அநுமானம் - ஐயம்; வழியளவை.
அநேகம் - பெரும்பான்மை; பல.
அந்தகன் - கூற்றுவன்; குருடன்.
அந்தஸ்து - நிலைமை; ஒழுங்கு; நிலை; தகுதி
அந்தம் - அழகு; முடிவு; குருடு; ஈறு; கேடு; எல்லை.
அந்தரங்கம் - அநுமறை; மறை பொருள்; உள்ளம்; தனிமை.
அந்தரம் - வான்; வெளி; இடை வெளி; துணையின்மை; காலம்.
அந்தரவாணி - வானொலி.
அந்நியம் - அயல்; வேறு; வேற் றுமை; பிறிது.
அந்நியோந்நியம் - நெருக்கம்; ஒற்றுமை; ஒருவர்க்கொருவர்.
அபகரித்தல் - கவர்தல்; கொள்ளை யிடல்; பறித்தல்; வவ்வல்.

அபகாரம் - தீங்கு; பொல்லாங்கு; நன்றியில் செயல்.
அபசயம் - தோல்வி.
அபத்தம் - பொய், தவறு.
அபயம் - அடைக்கலம்.
அபரஞானம் - கருவியறிவு; நூலறிவு.
அபராதம் - ஒறுப்புக் கட்டணம்; குற்றம்; பிழை.
அபவிருத்தி - குறைவு.
அபாண்டம் - பெரும்பொய்; பெரும்பழி; இடும்பழி.
அபாயம், அபாயகரம் - பேரிடர்; அழிவு; கேடு; துன்பம்; இடுக்கண்.
அபானவாயு - மலக்காற்று
அபிடேகம், அபிஷேகம் - திருமுழுக்கு; புதப்புனலாட்டு.
அபிநயம் - உள்ளக் குறிகாட்டல்; கைமெய்காட்டல்; கூத்து.
அபிப்பிராயம் - நோக்கம்; எண்ணம்; உட்கருத்து; உட்கோள்; உள்ளப் போக்கு; கொள்கை.
அபிமானம் - பற்று; நேயம்; செருக்கு.
அபிவிருத்தி - பெருக்கம்; ஆக்கம்; வளர்ச்சி.
அபூர்வம் - அருமை; அரியபொருள்.
அபேட்சை - அவா; விருப்பம்.
அபேதம் - வேற்றுமையின்மை; வேறன்மை.
அப்பியாசம் - பழக்கம்; பயிற்சி.
அப்பிராணி - ஏழை; கரவிலான்; பேதை.
அப்பு - புனல்.
அமரபக்ஷம் - தேய்பிறை.
அமாவாசை - புதுப்பிறை; பிறையுவா.
அமுது - சோறு; அடிசில்; இனிமை
அம்சம் - வகை; அன்னப்புள்; கூலம்; எண்; பங்குகூறு.
அம்பாரம் - குவியல்.
அம்பிகை - தாய்; அம்மை.
அயச்செந்தூரம் - இரும்புச்செந்தூள்.
அயபஸ்பம் - இரும்புவெண்ணீறு.
அயோக்கியதை - தகுதியின்மை; தகாதது.
அரம்பை, ரம்பை - தெய்வப் பெண்; அரிவை; வாழைமரம்.
அரவம் - ஒலி; பாம்பு.
அராகம் - விருப்பு.
அருணோதயம் - வைகறை; விடியல்; கதிரோன் வருகை.
அருத்தம், அர்த்தம் - பொருள்; பாதி.
அருவம் - உருவின்மை; அழிவின்மை.
அர்ச்சனை, அருச்சனை - பூவழிபாடு; மலர்தூவி வழிபாடு; பூசை.
அர்த்தசாமம் - நள்ளிரவு.
அர்த்தநாரீசுரன் - மங்கை பங்கன்; மாதிருக்கும் பாதியன்.
அர்ப்பணம் - நீரொடு கொடுத்தல்; உரிமைப்படுத்தல்; ஒப்புவித்தல்.
அலங்காரம் - அழகு; ஒப்பனை; அணி; புனைவு.
அலட்சியம் - பொருட்படுத்தாமை; கருத்தின்மை.
அலுவா - கோதுமைத்தேம்பாகு.
அவகாசம் - ஒழிவு; ஓய்வு.
அவசரம் - விரைவு; பரபரப்பு; சுருக்கு; பதைப்பு.
அவசியம் - முதன்மை; கட்டாயம்; இன்றியமையாமை.
அவதாரம் - பிறப்பு; இறங்குகை.
அவதி - துன்பம்.
அவத்தை - நிலை; துன்பம்; நிலைமை.
அவதூறு - பழிச்சொல்.

அவமானம் - மானக்கேடு; புகழின்மை; இழிவு.

அவயவம் - உறுப்பு.

அற்பம் - சிறுமை; அணு; புன்மை.

அற்புதம் - புதுமை; வியப்பு; அ[illegible]ன்நிகழ்ச்சி; அரியசெயல்.

அனுபவம் - துய்ப்பு.

அனுபோகம் - நுகர்ச்சி.

அன்னசத்திரம் - ஊட்டுப்புரை.

ஆகாசம் - விண்; வெளி; வான்; விசும்பு; வானம்.

ஆகாயவிமானம் - வானவூர்தி.

ஆகாரம் - உணவு; அடிசில்.

ஆகுலம் - ஆரவாரம்; வருத்தம்.

ஆக்கிராணம் - மூக்கு.

ஆக்னேயம் - புருவநடு.

ஆக்ஞை - ஆணை; கட்டளை.

ஆசங்கை - ஐயம்.

ஆசமனம் - குடித்தல்.

ஆங்காரம் - இறுமாப்பு; செருக்கு; தருக்கு.

ஆசர், ஆஜர் (உருது) - நேர்; வருகை.

ஆசனம் - இருக்கை; அணை.

ஆசனவாய் - எருவாய்; மலவாய்.

ஆசாபாசம் - அவாக்கட்டு; அன்பு; உலகப்பற்று.

ஆசாமி (உருது) - ஆள்.

ஆசாரம் - ஒழுக்கம்; வழக்கம்; நல்லநடை; துப்புரவு.

ஆசியம் - எள்ளல்; நகை; சிரிப்பு.

ஆசிரமம் - பள்ளி; பாழி; முனிவருறையுள்.

ஆசீர்வாதம் - வாழ்த்துரை.

ஆசை - விருப்பம்; அவா; பற்று; வேட்கை; விழைவு.

ஆச்சரியம் - புதுமை; வியப்பு; இறும்பூது.

ஆஸ்தி - பொருள்; செல்வம்.

ஆஸ்திகன் - கடவுட் கொள்கையன்.

ஆஸ்பத்திரி - மருத்துச்சாலை

ஆடம்பரம் - ஆரவாரம்.

ஆட்சேபம்-தடை; மறுப்பு; எதிர்மொழி.

ஆதரவு - துணை; உதவி; சார்பு; பற்றுக்கோடு; நிலைக்களன்.

ஆதாரம் - பற்றுக்கோடு; நிலைக்களன்; களைகண்; சான்று; அடிப்படை.

ஆதி - முதல்; பழைமை; அடி; தொடக்கம்; காரணம்; எழுவாய்; கடவுள்.

ஆதிக்கம் - உரிமை; முதன்மை; மேன்மை; தலைமை; மேலீடு.

ஆதியந்தம் - அடிமுதல்.

ஆதியோடந்தமாய் - ஒன்றும் விடாமல்: முதலிலிருந்து கடைசிவரை.

ஆதிரம் - நெய்.

ஆதுலம் - வறுமை

ஆத்திரம் - விரைவு; பரபரப்பு.

ஆத்துமா, ஆன்மா - உயிர்.

ஆநந்தம் - இன்பம்.

ஆநந்தபரவசம் - இன்பமயம்.

ஆந்திரதேசம் - தெலுங்குநாடு.

ஆபத்து - இடர்; துன்பம்; இக்கட்டு; ஊறுபாடு.

ஆபாசம் - அருவருப்பு; பொய்; [illegible]வைப்போலி.

ஆப்தம் - அன்பு; நட்பு.

ஆமோதித்தல் - உடன்[illegible] வழிமொழிதல்; மகிழ்தல்.

ஆயத்தம் (ஹிந்தி) - முயற்சி; முன்னேற்பாடு.

ஆயாஸம் - களைப்பு; இளைப்பு; சோர்வு; அயர்வு; மயக்கம்.

ஆயுசு, ஆயுள் - வாழ்நாள்; ஆண்டு.

ஆயுதம் - கருவி; படைக்கலம்; [illegible] வாள்.

ஆரணியம் - காடு.

ஆரம் - பூமாலை; தொடையல்.

ஆரம்பம் - துவக்கம்; தொடக்கம்.
ஆராதனை - வழிபாடு.
ஆராதித்தல் - வழிபடுதல்.
ஆரியம் - வடமொழி.
ஆரியர் - மிலேச்சர்.
ஆரூடம் - முன்னறிதல்.
ஆரோகம் - ஏற்றுதல்.
ஆரோக்கியம் - நலம்; நோயின்மை.
ஆலயம் - கோயில்.
ஆலிங்கனம் - தழுவல்.
ஆலோசனை - சூழ்ச்சி; சூழ்தல்; ஓர்வு; எண்ணம்; ஆராய்ச்சி.
ஆவசியம் - கட்டாயம்; முதன்மை; இன்றியமையாமை.
ஆவலாதி - புறங்கூற்று; புறந்தூற்றல்; குறைகூறுதல்.
ஆவேசம் - மருள்; தெய்வமேறல்; உட்புகல்; பேய்.
இகம் - இவ்வுலகம்; இவ்விடம்; இப்பிறப்பு.
இக்கணம் - இப்போது.
இச்சுகம் - முழமன்,
இச்சை - விருப்பம்; அவா; விழைவு; வேட்கை.
இடங்கம் - உளி.
இடபம் - எருது; காளை; ஏறு.
இடம்பம் - ஆரவாரம்; வீண்பெருமை.
இட்டம், இஷ்டம் - அன்பு; விருப்பம்.
இஷ்டன் - நண்பன்.
இதம், ஹிதம் - இனிமை; நன்மை; அன்பு; அறம்.
இதரம் - வேறு; அயல்; அறிவு; பகைமை.
இதாதீதம் - நன்மைதீமை.
இந்திரியங்கள் - ஐம்பொறிகள்.
இமிசை - கடுந்துன்பம்; வருத்தம்.
இயந்திரம் - பொறி; மறை; மொழித்தகடு.
இயமன், எமன் - கூற்றுவன்; காலன்; மறலி.
இரகசியம் - மறைபொருள்; மறை; அற்றம்.
இரசம் - சாறு; மிளகுநீர்.
இரசவாதம் - பொன்னாக்கல்.
இரசாபாசம் - அருவருப்பு; ஒழுங்கின்மை.
இரசிகன் - சுவைஞன்.
இரசித்தல் - சுவைத்தல்.
இரட்சித்தல் - காப்பாற்றுதல்; புரத்தல்; ஓம்புதல்.
இரணவைத்தியம் - புண்மருத்துவம்; அறுவைமருத்துவம்.
இரதம் - தேர்.
இரத்தம் - குருதி; செந்நீர்.
இரத்தினம் - மாமணி; செம்மணி.
இரம்பம் - ஈர்வாள்.
இராகம் - இசை; பண்; அவா.
இராஜஸ்ரீ - அரசத்திரு.
இராஜா - அரையன்; மன்னன்.
இராஜதானி - அரசர்தலைநகர்.
இராசதம் - மனவெழுச்சி.
இராசி - ஓரை
இராச்சியம் - அரசியல்; நாடு.
இராணுவம் - போர்ப்படை.
இராத்திரி - இரவு; கங்குல்.
இருசால் - திறைப்பணம்; திறை.
இருடி - முனிவன்; தவசி; துறவி.
இருதயம், இதயம் - நெஞ்சம்; உள்ளம்; அன்பு.
இருது, ருது - பருவம்; மகளிர் முதற்பூப்பு.
இருதுமங்களஸ்நானம் - பூப்புநன்னீராட்டு.
இருதுசாந்தி - பூப்புக் கழிப்பு
இரேகை - வரி, எழுத்து, கைவரை, திரை, கோடு.
இலகான் (இந்துஸ்) - கடிவாளம்.
இலகிமா - மென்மை.

இலக்கம் - இலட்சம்; எண்; நூறு யிரம்.
இலக்குமி - திருமகள்; அழகு; செல்வம்.
இலஞ்சம் - கைக்கூலி; கையுறை.
இலட்சணம் - அழகு; பார்வை.
இலட்சியம் - குறிக்கோள்.
இலயம், லயம் - ஒடுக்கம்; அழிவு.
இலவசம் - விலையின்மை.
இலவணம் - உப்பு.
இலவுகிகம் - உலகியல்; உலகப் போக்கு.
இலாகா - ஆட்சி; எல்லை; துறை.
இலாகிரி - வெறி; மயக்கம்.
இலாடம் - காற்பரலை.
இலாபம்-ஊதியம்; மிச்சம்; பேறு.
இலாபநஷ்டம்-கூடுதல் குறைதல்; ஊதியமும் பொருட்கேடும்.
இலாயம் - குதிரைப் பந்தி.
இலாவாதேவி - கொடுக்கல் வாங்கல்; பண்டமாற்று.
இலிங்கம் - குறி; அடையாளம்.
இலேகியம் - பாகுமருந்து; இளகம்.
இலேசு - மேலாடை.
ஈசன் - தலைவன்; ஆள்வோன்.
ஈசானம் - வடகீழ்ப்பால்.
ஈசுரநிச்சயம் - கடவுளுண்மை.
ஈடணம் - விருப்பம்.
ஈநம் - இழிவு; குறைபாடு; குறைவு.
உக்கிரம் - கொடுமை; வெப்பம்; சினம்; ஊக்கம்; மிகுதி.
உக்கிராணம் - களஞ்சியம்; சரக்கறை.
உசிதம் - உயர்வு; சிறப்பு; மேன்மை; தகுதி; ஒழுங்கு.
உச்சந்தம் - தணிவு.
உச்சரிப்பு - எழுத்தோசை.
உச்சி - மேடு; முகடு.
உஷ்ணம் - வெப்பம்; சூடு.
உதயம் - காலை; விடியல்; பிறப்பு; வெளிப்படல்; தோற்றம்.
உதரம் - வயிறு.
உதாரம், உதாரகுணம் - வள்ளன்மை; தன்னளி; ஈகைத் தன்மை.
உதாரணம் - எடுத்துக்காட்டு, சான்று.
உதித்தல் - பிறத்தல்; தோன்றுதல்.
உதிரம் - செந்நீர்; குருதி.
உத்தமம் - உண்மை; மேன்மை.
உத்தமி - கற்புடையவள்.
உத்தரம் - மறுமொழி.
உத்தரவு - கட்டளை.
உத்தியோகம் - அலுவல்; முயற்சி; தொழில்.
உத்தேசம் - கருத்து; மதிப்பு; ஏறக்குறைய.
உந்நதம் - உயர்ச்சி; மேன்மை.
உபகரணம் - கொடுத்தல்; உதவிப் பொருள்; கருவிப் பொருள்.
உபகாரம் - வரவேற்பு; முகமன்; வேளாண்மை.
உபதேசம் - அருண்மொழி; அறிவுரை.
உபத்தம் - கருவாய்.
உபத்திரவம் - இடர்; இக்கட்டு; துன்பம்; வருத்தம்; தடை.
உபநதி - கிளையாறு.
உபநயநம் - பூணூற்சடங்கு; வழிநடத்துதல்; மூக்குக்கண்ணாடி.
உபந்நியாசம் - சொற்பொழிவு.
உபயோகம் - பயன்.
உபவனம் - பூஞ்சோலை.
உபாசனை - வழிபாடு; வணக்கம்.
உபாதி - நோய்; துன்பம்.
உபாத்யாயன் - ஆசிரியன்; கற்பிப்போன்; கணக்காயன்.
உபாத்தியாயினி - கற்பிப்போள்; ஆசிரியை.

உபாயம் - சூழ்ச்சி ; சொப்பமை ; எளிது ; சிறிது.
உபேட்சை - அசட்டை ; விருப்பின்மை; வெறுப்பு.
உயிர்ப்பிராணி - உயிர்ப்பொருள்.
உருக்குமணி - பொன்மணி.
உருசி - சுவை.
உருத்திராக்கம் - சிவமணி; அக்குமணி.
உருபித்தல் - மெய்ப்பித்தல்
உரொக்கம் - கைப்பணம்; இருப்பு; மொத்த இருப்பு.
உரோகம் - நோய்; ஒளியின்மை.
உரோமம் - மயிர்; மூடி; குஞ்சி.
உலகப்பிரசித்தி - எங்கும் பரந்த புகழ்.
உலோகம் - உலகம் ; வெள்ளி ; பொன்; செம்பு முதலியன.
உலோபம் - ஈயாமை; இவறன்மை; கடும்பற்றுள்ளம்.
உல்லாசம் - மகிழ்ச்சி; விளையாட்டு; உள்ளக்களிப்பு
உற்சவம் - திருவிழா; திருநாள்.
ஊகித்தல் - நினைத்தல்; ஓர்தல்.
ஊநம் - குறைவு; இழிவு.
ஊர்ச்சிதம் - உறுதி; நிலைப்படுதல்.
எக்கியம் - வேள்வி.
எசமானன் - தலைவன்; முதல்வன்.
எதார்த்தம் - உறுதி; உண்மை.
எதேச்சை - விருப்பப்படி.
எவ்வநம், யௌவனம் - இளமை; அழகு.
ஏகதேசம் - ஒருபால் ; ஒருபுடை ; சிறுபான்மை
ஏகம் - ஒன்று: தனிமை.
ஏகாங்கி - தனியன்; துறவி.
ஏகாதிபத்தியம் - தனியரசாட்சி
ஏகாந்தம் - தனிமை; ஒரு முடிவு.
ஏடணை - விருப்பம்
ஏதம் - குற்றம்; துன்பம்; தீங்கு.
ஏது - காரணம்.
ஏனம் - பன்றி.
ஐக்கியம் - ஒற்றுமை.
ஐச்வரியம் - செல்வம்; திரு.
ஐதிகம் - உலகுரை.
ஓமம் - வேள்வி.
ஔடதம் - மருந்து.
ஔபாசனம் - வேள்வித்தீயோம்புகை ; உணவொழிநோன்பு ; எரியோம்பல்.
கங்கணம் - காப்பு.
கடகம் - வாள்.
கட்சி, கக்ஷி - பக்கம்; சார்பு.
கஷாயம் - மருந்துக் குடிநீர்
கடினம் - வன்மை;. கடுமை வருத்தம்; கொடுமை.
கடூரம் - கொடுமை.
கஷ்டம் - துன்பம்; வருத்தம்.
கஷ்டசாத்தியம் - அரிதின்முடிவது.
கணபதி - பிள்ளையார்.
கணிதம் - கணக்கு.
கண்டம் - நிலப்பிரிவு ; பிரிவு ; துண்டு; கட்டி; மிடறு; கழுத்து.
கண்டனம் - மறுப்பு.
கண்திருஷ்டி - கண்ணேறு; கண்ணெச்சில்.
கதம்பம் - கூட்டம்; மணப்பொருட்கூட்டு.
கநகம் - பொன்.
கந்தமூலம் - கிழங்கு
கந்தம் மணம்; நாற்றம்.
கந்துகம் - குதிரை; பந்து.
கந்மஷம் - அழுக்கு; தீவினை.
கந்நிகை - மணமாகாதவள்; இளம்பெண்.
கபம் - கோழை.
கபோதி - குருடன்.
கமலம் - தாமரை.
கம்பீரம் - செருக்கு; உயர்தோற்றம்; பெருமை; ஆழம்.
கயரோகம் - எலும்புருக்கி நோய்.

கயிலாசம், கயிலாயம் - சிவப்பேறு; நொடித்தான் மலை.
கரகோஷம் - கைதட்டுதல்.
கருடன் - கலுழன்.
கருணை - அருள்; இரக்கம்.
கருத்தா, கர்த்தா - தலைவன்; வினை முதல்; ஆக்கியோன்; நூலாசிரியன்.
கருமம் - வினை; தொழில்.
கர்க்கடகம் - நண்டு.
கர்ச்சனை - முழக்கம்.
கர்ப்பக்கிரகம் - அகநாழிகை; திருஉள் நாழிகை.
கர்ப்பவதி - சூலி.
கர்வம் - செருக்கு.
கலசம் - குடம்,
கலாசாலை - கல்லூரி.
கலியாணம் - மணம்; மன்றல்.
கவி - செய்யுள்; பாவலன்; பாட்டு.
கவுளி - பல்லி.
கனம் - சுமை; பளுவு.
காசம் - ஈளைநோய்; இருமல்நோய்.
காஷாயம் - காவி.
காஷ்டம் - விறகு.
காயம் - உடல்; யாக்கை; வான்.
காரகன் - செய்பவன்.
காரியதரிசி - அமைச்சன்; செயலாளன்.
காரியஸ்தன் - செயலாளன்.
காலக்கிரமம் - கால ஒழுங்கு.
காலச்சேபம் - வாழ்க்கை; நாட் கழித்தல்.
காளம் - கருமை; முகில்.
கிஸ்தி (இந்துஸ்) - திறை.
கிஞ்சுகம் - கிளி.
கிடாரம் - கொப்பரை.
கியாதி - புகழ், பேன்மை,
கிரகசாரம் - கோள்நிலை; கோட்சாரம்.
கிரகணம் - பற்றுதல்; பிடித்தல்.
கிரகம் - வீடு; கோள்; பற்றுதல்; பிடிப்பு.
கிரகஸ்தம் - இல்லற நிலை.
கிரகித்தல் - பற்றுதல்; இழுத்தல்; கவர்தல்; உணர்தல்.
கிரந்தம் - நூல்.
கிரமம் - ஒழுங்கு; முறைமை.
கிரயம் - விலை.
கிராதன் - குறவன்; வேட்டுவன்.
கிராமம் - சிற்றூர்.
கிரியை - தொழில்; செயல்; வினை; சடங்கு.
கிரீடம் - முடி.
கிருஷி - பயிர்; உழவு; பயிர்ச்செய்கை.
கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறை.
கிருபை - அருள்; இரக்கம்.
கிருமி - பூச்சி; புழு.
கிலம் - அழிவு.
கிலேசம்-அச்சம்; கவலை; துன்பம்.
கீணம், க்ஷீணம் - கேடு; சிதைவு.
கீதம் - இசை; இசைப்பாட்டு.
கீர்த்தி - புகழ்; இசை.
குக்குடம் - கோழி.
குலசம் - நலம்; நன்மை.
குஞ்சரம் - யானை.
குஷ்டம் - தொழுநோய்; பெருநோய்.
குணம் - இயல்பு.
குதூகலம் - பெருங்களிப்பு; பெருமகிழ்ச்சி.
குபேரன் - பெருஞ் செல்வன்; செல்வக்கடவுள்.
குமரி, குமாரி-நங்கை; மணமாகாப் பெண்; புதல்வி; மகள்.
கும்பகோணம் - குடமூக்கு.
கும்பாபிஷேகம் - குடமுழுக்கு.
கும்பம் - குடம்.
குருபக்தி - ஆசானிடத்தன்பு, குருவினிடத்தன்பு.
குரூபி - உருவிலி; அழகிலி.

குரூரம் - கொடுமை; அஞ்சாமை; தறுகண்; ஈரமின்மை.
குரோதம் - உட்பகை; சினம்.
குலஸ்திரீ - குலமகள்.
குன்மம் - சூலை; வயிற்றுவலி.
கூசுமாண்டம் - பூசுணி.
கூபம் - கிணறு; கூவல்.
கூர்மம் - ஆமை.
கேலி - பகடி; இகழ்ச்சி.
கைங்கரியம் - தொண்டு; பணி.
கோஷ்டம் - கூட்டம்; மணப் பொருள்; பேரொலி.
கோஷம் - முழக்கம்.
கோஷ்டி - கூட்டம்.
கோதண்டம் - வில்.
கோத்திரம் - குலம்; வகுப்பு; மரபு.
கோமயம் - ஆனீர்.
கோரம் - கொடுமை; அச்சம்.
சகசம் - இயற்கை; ஒற்றுமை.
சகடம், சகடு - வண்டி.
சகலம் - எல்லாம்.
சகலர் - மும்மலக்கட்டினர்.
சகவாசம் - கூடவிருத்தல்; உடனுறைதல்; பழக்கம்; சேர்க்கை; நட்பு.
சகன் - தோழன்; கூட்டாளி.
சகாயம் - உதவி; துணை; நயம்; நன்மை; மலிவு; பயன்.
சகித்தல் - பொறுத்தல்.
சகுனம் - குறி.
சகோதரன் - உடன் பிறந்தான்; தமையன்; தம்பி.
சகோதரி - உடன் பிறந்தாள்; தமக்கை; தங்கை.
சகோதரம் - விலாவெலும்பின்.
சக்கரம் - உருளை; வட்டம்.
சக்கரதரன் - திருமால்.
சக்கரவர்த்தி - தனியரசாள்வோன்; மன்னர்மன்னன்; அரசர்க்கரசன்.
சக்தி - ஆற்றல்; வல்லமை; வலி.
சங்கடம் - நெருக்கம்; துன்பம்; கேடு; வருத்தம்.
சங்கதி - செய்தி.
சங்கமம் - ஆறு கடலோடு கூடுமிடம்; கூடுகை; இயங்குதிணைப் பொருள்; அசைவன.
சங்கற்பம் - நினைப்பளவு.
சங்காரம் - அழித்தல்.
சங்கிராந்தி - திங்கட்பிறப்பு; ஒன்றினின்று பிறிதொன்றின்கட் செல்லல்.
சங்கீதம் - இசை.
சங்கேதம் - குறியீடு; நினைவு.
சங்கை - எண்; ஐயம்; அச்சம்.
சங்கோசம் - கூச்சம்; வெட்கம்; உட்குதல்.
சச்சிதானந்தம்- உண்மையறிவின்பம்
சஞ்சலம் - கலக்கம்; கவலை; துன்பம்; அசைவு.
சஞ்சிதம் - ஈட்டியது; எஞ்சியது.
சடுதி, சடிதி (இந்துஸ்) - விரைவு.
சஷ்டியப்தபூர்த்தி - அறுபதாண்டு நிறைவு.
சட்சு - கண்.
சண்டித்தனம் - முரட்டுத்தன்மை.
சதா - எப்பொழுதும்.
சதானந்தம் - இடையறுவின்பம்.
சதுரம் - அறிவுடைமை; திறமை; நாற்பக்கம்.
சத்தம்-ஓசை; ஒலி; சொல்; ஏழு.
சத்தியம் - உண்மை; ஆணை; மெய்.
சத்திரம் - உணவுச் சாலை; ஊட்டுப்புரை; சாவடி; குடை.
சத்துரு - பகைவன்.
சத்துவம் - விறல்; மெய்ப்படுதல்.
சந்ததம் - எப்பொழுதும்.
சந்ததி - வழிவழி; பின்னை; எச்சம்; கால்வழி.
சந்தர்ப்பம் - சமயம்: அற்றம்; நேரம்.

சந்தியாவந்தனம் - காலை மாலை வழிபாடு.

சந்திரன் - திங்கள்; தண்கதிர்; நிலவு; மதி; அம்புலி; பிறை.

சந்து - முடுக்கு; இயங்கும் உயிர்; தூது; பிணப்பு; பொருத்து; இரண்டு; மூட்டு.

சந்துஷ்டி - மகிழ்ச்சி.

சந்தோஷம் - மகிழ்ச்சி; உவகை; களிப்பு.

சந்நிதி, சந்நிதானம் - திருமுன்.

சந்நியாசம் - துறவு; துறவறம்.

சந்நியாசி - துறவி.

சபதம் - வஞ்சினம்; ஆணை.

சபம், ஜெபம் - உருவேற்றல்.

சபா, சபை - அவை; மன்றம்; கழகம்; அரங்கம்.

சமஸ்கிருதம் - நன்றாகச் செய்யப்பட்டது; வடமொழி.

சமத்தன், சமர்த்தன் - வல்லவன்; திறமையாளன்.

சமத்துவம் - ஒத்த உரிமை; ஒன்றுபடல்.

சமயம் - பொழுது; நேரம்; காலம்.

சமயோசிதம் - காலப் பொருத்தம்; தக்கநேரம்.

சமரசம் - பொது; வேறுபாடின்மை.

சமாசம் - கழகம்; கூட்டம்.

சமாசாரம் - செய்தி.

சமாதானம் - அமைதி; இணக்கம்; தணிவு; உடன்பாடு; தக்கவிடை.

சமாதி - அமைதி; பிணக்குழி; பேசாதிருத்தல்; இறப்பு.

சமானம் - உவமை; ஒப்பு; இணை.

சமிக்ஞை - குறிகாட்டல்.

சமீபம் - அருகு; அண்மை; மருங்கு.

சமுகம் - நேர்; திருமுன்.

சமுச்சயம், சம்சயம் - கூட்டம்; ஐயம்.

சமுதாயம், சமூகம் - கூட்டம்.

சமுத்திரம் - கடல்.

சமேதம் - கூடஇருத்தல்.

சம்சாரம் - குடும்பம்.

சம்பத்து - செல்வம்.

சம்பந்தம் - உறவு; பற்று; இயைபு; சார்பு; தொடர்பு; பொருத்தம்.

சம்பவம் - நிகழ்ச்சி; செயல்.

சம்பாஷணை - உரையாடல்.

சம்பாதித்தல் - ஈட்டல்; தேடல்; தொகுத்தல்.

சம்பிரதாயம் - தொன்று தொட்ட வழக்கு; முன்னோர் நடை; பண்டைமுறை.

சம்பூரணம் - நிறைவு.

சம்மதம் - உடன்பாடு; ஒப்பு.

சம்ரக்ஷணை - பாதுகாப்பு.

சயநம் - படுக்கை, உறக்கம்.

சயம், ஜெயம் - வெற்றி.

சயிலம் - மலை.

சரசம் - இனிய பண்பு; இனிய விளையாட்டு.

சரசுவதி - கலைமகள்; நாமகள்.

சரணம் - அடைக்கலம்; வணக்கம்; கால்; திருவடி.

சரணாகதி - புகலடைதல்; அடைக்கலம் புகுதல்.

சரணாரவிந்தம் - திருவடித்தாமரை.

சரம் - மாலை; அம்பு.

சரவணம் - நாணல்; பொய்கை.

சரிதம், சரித்திரம் - வரலாறு.

சரீரம் - உடல்; யாக்கை; மெய்.

சர்ப்பம் - பாம்பு.

சருமம் - தோல்.

சருவம் - எல்லாம்.

சரோசம் - தாமரை.

சர்வகலாசாலை - பல்கலைக் கழகம்.

சர்வமானியம் - இறையிலி.

சர்வேஸ்வரன் - எப்பொருட்கும் இறைவன்.

சலசம் - தாமரை.

சலசந்தி - கடலிணைக்கால்.

சலசாட்சி - தாமரைக்கண்ணி.
சலம், ஜலம் – நீர்.
சலதோஷம் - நீர்க்கோவை.
சலநம் - அசைவு.
சல்லாபம் - உரையாடல்.
சவம் - பிணம்.
சனம், ஜனம் - மக்கள், நரல்.
சனனம், சன்மம் - பிறப்பு.
சனி - காரி.
சன்மார்க்கம் - நன்னெறி.
சன்மானம் - பரிசு.
சன்னல் - பலகணி.
சாகரம் - கடல்.
சாக்கிரதை - விழிப்பு; உன்னிப்பு; எச்சரிக்கை.
சாக்கிரம் - கனவு.
சாகை - தங்குமிடம்; வீடு.
சாசனம் - முறி.
சாசுவதம் - அழியாமை; அசையாநிலை; உறுதி; வீடுபேறு.
சாடி - தாழி.
சாட்சி - சான்று; கரி.
சாஷ்டாங்கம் - எட்டுறுப்பு.
சாதகம் - பயற்சி; பிறந்தநாட் குறிப்பு; உதவி; காரியங் கைகூடல்.
சாதம் - சோறு.
சாதனம் - கருவி; இடம்; பயிற்சி; உறுதிமுறி; அடையாளம்; முயற்சி கைகூடல்.
சாதாரணம் - பொது.
சாதி - இனம்; குலம்; வகுப்பு.
சாதித்தல் - நிலைநிறுத்தல்.
சாதியாசாரம் - குல ஒழுக்கம்.
சாது - அறவி.
சாதுரியம் - திறமை; வன்மை.
சாத்திரம் - கலை; நூல்.
சாத்மிகம், சாத்துவிகம் - அமைதித் தன்மை.
சாந்தம் - அமைதி; பொறுமை.
சாந்திரம் - நெருக்கம்; திங்கட் தொடர்புடையது.
சாபம் - தீமொழி; வசவு; வில்.
சாமார்த்தியம் - வல்லமை; திறமை; சூழ்ச்சி; கூறுபாடு.
சாமான் - பொருள்கள்; தட்டு முட்டுகள்.
சாமி, சுவாமி - கடவுள்; தலைவன்; அடிகள்.
சாமீப்பியம் - சிவனருகிருப்பு.
சாயை - நிழல்.
சாயுச்சியம் - சிவப்பேறடைவு
சாரதி - வலவன்.
சாராம்சம் - சிறந்த பகுதி.
சாரீரம் - இனிய குரல்; இன்னிசை; உடற்றொடர்பு
சாரூபம் - சிவனுருவம்.
சாலோகம் - சிவவுலகு.
சாவகாசம் - ஒழிவு; ஓய்வு; வசதி; விரைவின்மை.
சாவதாநம் - ஒழிவு; ஓய்வு; உன்னிப்பு.
சிகரம் - தலை; மலை; உச்சி; மூகடு; குவடு.
சிகிச்சை, சிகித்சை - மருத்துவம்; பரிகாரம்.
சிகை - குடுமி; கூந்தல்.
சிங்கம், சிம்ஹம் - அரிமா; ஏறு.
சிங்காசநம் - அரியணை.
சிங்காரம் - ஒப்பனை; திருத்தம்; அழகு.
சிங்குவை - வாய்.
சிசு - குழந்தை; மகவு.
சிசுருஷை - பணிவிடை
சிட்சை, சிக்ஷை - கற்பித்தல்; கல்வி பயிற்றல்; ஒறுத்தல்.
சிருட்டி, சிருஷ்டி - படைப்பு.
சித்தம் - உள்ளம்; நினைவு; கருத்து.
சித்தி - பேறு; ஆக்கம்.
சித்திரம் - ஓவியம்; படம்.

சித்திரவதை - வன்கொலை.
சிநேகம், சிநேகிதம் - நட்பு; கேண்மை
சிரஞ்சீவி - நீடுவாழ்வோன்.
சிரத்தை - அன்பு; ஊக்கம்; உளத்திட்பம்; விருப்பு.
சிரம பரிகாரம் - துன்ப நீக்கம்.
சிரமம் - துன்பம்; தொல்லை.
சிரவணம் - கேள்வி.
சிரார்த்தம் - இறந்தநாட் கடன்.
சிருட்டி - படைத்தல்.
ஸ்திரீ தனம், ஸ்ரீதனம் - மகளுக்குக் கொடுக்கும் கொடை; மகட்கொடை.
ஸ்ரீமத் - திருவாளர்.
ஸ்ரீலஸ்ரீ - மறைத்திருவாளர்.
சிரேஷ்டம் - சிறப்பு.
சிரேஷ்டன் - தலைவன்; மூத்தோன்
சிலாகித்தல் - புகழ்தல்.
சிலாக்கியம் - மேன்மை; நன்மை.
சிலேட்டுமம் - சளி; கோழை.
சிவிகை - பல்லக்கு.
சிற்பம் - கற்றச்சு.
சின்னம் - அடையாளம்.
சின்ன பின்னம் - உருக்குலைவு.
சீக்கிரம் - விரைவு; ஒல்லை; கடிது.
சீடன் - மாணக்கன்.
சீணதசை - அழிவு காலம்; மழுக்கம்.
சீதபேதி - வயிற்றளைச்சல்.
சீதம், சீதளம் - குளிர்ச்சி.
சீதோஷ்ணம் - தட்பவெப்பம்.
சீமந்தம் - சூல்காப்பிடுஞ் சடங்கு.
சீமந்த புத்திரன் - தலைமகன்.
சீமந்தினி - பெண்மகள்.
சீரணம் - செரித்தல்; பழுது.
சீர்ணோத்தாரணம் - பழுது பார்த்தல்.
சீலம் - ஒழுக்கம்.
சீவசெந்து - உயிர்ப்பொருள்.
சீவகாருண்யம் - உயிர்களிடத்தன்பு; அருள் ஒழுக்கம்.
சீவனம் - பிழைப்பு.
சீவியம் - வாழ்நாள்; பிழைப்பு; வாழ்க்கை.
சுகந்தம் - நறுமணம்.
சுகம் - நலம்; இன்பம்.
சுகாதாரம் - நல்வழி.
சுகிர்தம் - நன்மை.
சுக்கிரவாரம் - வெள்ளிக்கிழமை.
சுக்கிலபக்ஷம் - வளர்பிறை.
சுக்கிலம் - வெண்ணீர்; வெண்மை.
சுதந்திரம் - உரிமை.
சுதேசம் - தாய்நாடு.
சுத்தம் - தூய்மை; துப்புரவு.
சுந்தரம் - அழகு.
சுபாவம் - தன்மை; இயற்கை; இயல்பு.
சுயபாஷை - தாய்மொழி.
சுபிக்ஷம் - செழிப்பு.
சுயம்வரம் - தான் விரும்பும் மணம்.
சுயார்ச்சிதம் - தான் தேடிய பொருள்.
சுயேச்சை - தன் விருப்பம்.
சுரஸம் - முதிர்த்த சாறு.
சுரம் - காய்ச்சல்; வெப்புநோய்.
சுருதி - குரல்.
சுலபம் - எளிது.
சுவதந்திரம் - உரிமை.
சுவர்க்கம் - துறக்கம்; பேரின்பவீடு.
சுவர்ணம் - பொன்.
சுவாசகாசம் - இளைப்பிருமல்.
சுவாசம் - மூச்சு; உயிர்ப்பு.
சுவாதிஷ்டானம் - கொப்பூழ்.
சுவீகாரம் - தனதாக்குதல்.
சுவேதம் - வெண்மை.
சுழுத்தி - உறக்கம்.
சூக்குமம் - நுண்மை; அணு.
சூசிகை - ஊசி; யானை; துதிக்கை.
சூதகம் - தீட்டு.
சூரணம் - தூள்.

சூரியன் - ஞாயிறு; பகலவன்; கதிரவன்; பரிதி; என்றாழ்; கனலி; எல்லோன்; வெயிலோன்; வெய்யோன்.
சூலம் - வேல்.
சூன்யம் - பாழ்; இன்மை; இல்பொருள்.
சேஷம் - எச்சில்; மிச்சம்.
சேஷ்டன் - தமையன்; மூத்தோன்.
சேஷ்டை - குறும்பு; தமக்கை; அக்காள்.
சேத்திரம் - திருக்கோயில்; திருப்பதி.
சேமம் - நலம்; காவல்; புதையல்.
சேவகன் - காவற்காரன்; போர் மறவன்.
சேவித்தல் - தொழுதல்; வணங்கல்.
சேனாதிபதி - படைத் தலைவன்; சேனைத்தலைவன்.
சைந்யம் - படை.
சைலம் - மலை.
சொஸ்தம் - நலம்; குணம்.
சொப்பனம் - கனவு.
சோதரன் - உடன்பிறந்தான்.
சோதனை - ஆராய்ச்சி; ஆய்வு; தேர்வு.
சோதி, ஜோதி - ஒளிவிளக்கம்.
சோதிடர், சோசியர் - கோள் நூலார்; காலக்கணிதர்; குறிப்பாளர்.
சோத்திரம் - செவி.
சோபித்தல் - ஒளிர்தல்; விளங்கல்.
சோமன் - திங்கள்; மதி.
சோமவாரம் - திங்கட்கிழமை.
சோலி (தெலு) - வேலை; தொழில்.
சௌகரியம் - நலம்; எளிது.
சௌக்கியம் - நலம்; மகிழ்ச்சி.
சௌஜன்யம் - நல்லிணக்கம்.
சௌந்தரம் - அழகு.
சௌபாக்கியவதி - செல்வி; திருமகள்.
சௌரமானம், சூரியமானம் - பகல் அழியளவு.
ஞாதி - சுற்றம்.
ஞானம் - அறிவு; கல்வி; மெய்யுணர்வு; அருளறிவு.
ஞாபகம் - நினைவு.
தகநம் - எரித்தல், சுடுதல்.
தக்கணம் - உடன்; தெற்கு.
தசாவதாரம் - பத்துப் பிறப்பு.
தயை, தசா - ஊன்; புலால்.
தட்சிணாமூர்த்தம் - குருவடிவம்; தென்முகக் கடவுள்.
தட்சிணை, தக்கிணை - காணிக்கை.
தண்டனை - ஒறுப்பு; ஆணை; கட்டளை.
ததாஸ்து - அப்படியேயாகட்டும்.
ததியோதநம் - தயிர்ச்சோறு.
தத்தம் - கொடுத்தல், ஈகை.
தத்துவம் - உண்மை; மெய்; பொருளியல் உண்மை.
தநம், தனம் - செல்வம்; பொருள்; கொங்கை.
தநவான் - செல்வன்.
தந்தம் - பல்.
தந்தி - கம்பி; மின்செய்தி; ஆண் யானை.
தந்திரம் - சூழ்ச்சி; நூல்.
தபசு, தவசு - தபம்.
தபால் (இந்துஸ்) - அஞ்சல்.
தமரகம் - உடுக்கை.
தமாஷ் (இந்துஸ்) - பகடி; விளையாட்டு.
தம்பதி - கணவனும் மனைவியும்.
தம்பம், ஸ்தம்பம் - தூண்.
தயவு, தயா, தயை - அன்பு; இரக்கம்; கண்ணோட்டம்.
தயிலம் - எண்ணெய்.
தரா - நிலம், வையகம்.

**தராசு, திராசு** - துலாக்கோல்; நிறைகோல்.
**தரிசனம்** - காட்சி; பார்வை, கண்.
**தரித்தல்** - அணிதல், பூணல்; உடுத்தல்; மேற்கொள்ளல்.
**தரித்திரம்** - வறுமை; எளிமை; நல்குரவு; மிடி; இன்மை.
**தருக்கம்** - அளவை; அளவை நூல்.
**தருணம்** - வேளை; பொழுது.
**தருமம்** - அறம்.
**தலம், ஸ்தலம்** - இடம்; கோயில்; பதி.
**தலயாத்திரை** - திருக்கோயிற் பயணம்; திருக்கோயிற் செலவு.
**தற்சமயம்** - இப்போது; இவ் வேளை.
**தாகம்** - விடாய்; நீர்வேட்கை.
**தாசன்** - அடியான்; அடிமை.
**தாட்சணியம்** - கண்ணோட்டம்.
**தாநம், ஸ்தாநம்** - இடம்; இருக்கை.
**தாபரம், தாவரம்** - நிலையியற் பொருள்; நிற்பன; அசையாப் பொருள்.
**தாபித்தல்** - நிறுவுதல்; நாட்டல்; நிலைநிறுத்தல்.
**தாமசம், தாமதம்** - தாழ்த்தல்; அட்டி; மயல்.
**தாமம்** - கயிறு; மாலை.
**தாம்பரபரணி** - பொருநை.
**தாரதம்மியம்** - ஏற்றத்தாழ்வு.
**தாற்பரியம்** - கருத்துரை.
**தானம்** - ஈகை; கொடை.
**தானியம்** - கூலம்.
**திடம்** - வன்மை; உறுதி.
**திட்டி, திருட்டி** - கண்; பார்வை; கண்ணேறு.
**திதி** - காத்தல்.
**திநம், தினம்** - நாள்; ஞான்று.
**தியாகம்** - கொடை
**தியானித்தல்** - நினைத்தல்; வழிபடல்.
**திரம், ஸ்திரம்** - நிலை; உறுதி.
**திரயம்** - மூன்று
**திரவியம்** - பொருள்; செல்வம்.
**திராதகம்** - செய்நீர்; சாரம்
**திராட்சை** - கொடி முந்திரி.
**திரி, ஸ்திரீ** - பெண்.
**திருட்டாந்தம்** - சான்று; எடுத்துக்காட்டு; மேற்கோள்.
**திருப்தி** - மனநிறைவு; திருத்தி; அமைவு; சால்வு.
**திரோபவம்** - மறைத்தல்.
**திலகம்** - பொட்டு.
**திவ்வியம்** - நேர்த்தி; இனிமை; மேன்மை.
**தினசரி** - நாடோறும்.
**தீபஸ்தம்பம்** - விளக்குத் தண்டு; கலங்கரை விளக்கம்.
**தீபாராதனை** - ஒளியால் வழிபடுகை.
**தீரம்** - கரை
**தீரன்** - திண்ணியன்; ஆண்டகை; திறலோன்.
**தீர்க்கதரிசி** - முக்கால வுணர்வினன்; மெய்க்காட்சியாளன்.
**தீர்க்கம்** - தெளிவு.
**தீர்த்தம்** - புனிதநீர்; திருக்குளம்
**தீவாந்தரம்** - தீவு; வெளி.
**தீவிரம்** - விரைவு.
**துக்கம்** - துன்பம்; பரிவு; கவலை; வருத்தம்; துயரம்.
**துஷ்டன்** - தீயவன்; பட்டி; வம்பன்.
**துதி, ஸ்துதி** - வணக்கம், வழுத்துரை.
**துரிதம்** - விரைவு.
**துரியம்** - பேருறக்கம்.
**துரியாதீதம்** - உயிர்ப்படக்கம்.
**துரோகம்** - இரண்டகம், வஞ்சனை.
**துவசம்** - கொடி.

துவாரம் - வாயில்; புழை; துளை.
துவேஷம் - பகை; வெறுப்பு.
தூஷணை - இகழ்ச்சி; பழி; பழிச் சொல்.
தூதர் - ஒற்றர்; வேவுகாரர்.
தூபம் - புகை.
தூபி, ஸ்தூபி - முடி (கோயில் முதலியவற்றின் முடி.)
தூரதிருஷ்டிக் கண்ணாடி - தொலை நோக்காடி.
தூரம் - சேய்மை; தொலைவு; எட்டாக் கை.
தூலம் - பருமை.
தேகம் - உடல்; யாக்கை; மெய்.
தேகவியோகம் - சாக்காடு.
தேகாப்பியாசம் - உடற்பயிற்சி.
தேசசு - ஒளி.
தேசம் - நாடு.
தேயு - அனல்.
தேவபக்தி, தெய்வபக்தி - கடவுட் பற்று; கடவுளிடத்தன்பு; தெய்வநேயம்.
தேவன் - இறைவன்; தலைவன்.
தேவஸ்தானம் - கடவுள் நிலையம்; கோவில்.
தேவாதீனம் - கடவுட்செயல்.
தேவி - இறைவி; அரசி; தலைவி.
தைரியம் - உறுதி; திட்பம்; ஆண்மை; ஊக்கம்.
தைலம் - எண்ணெய்.
தொக்கு - மெய்.
தோடம், தோஷம் - குற்றம்.
தோத்திரம் - வாழ்த்து; வழுத்து.
நகல் (அராபி) - படி.
நகுலம் - கீரி.
நடராஜமூர்த்தி, நடராஜன் - கூத்தன்; அம்பலவாணன்.
நட்சத்திரம் - மீன்; வெள்ளி; நாள்.
நட்டம், நஷ்டம் - கேடு; இழப்பு.
நதி - ஆறு; யாறு.
நந்தர் - இடையர்.
நந்தவனம், நந்தனவனம் - பூந்தோட்டம்; பூங்கா.
நபர் (அராபி) - ஆள்.
நமஸ்காரம் - வணக்கம்.
நயம் - நன்மை.
நயனம் - கண்.
நரகம் - நிரயம்; அளறு.
நரன் - மனிதன்.
நர்த்தனம் - கூத்து.
நவக்கிரகம் - ஒன்பது கோள்.
நவதானியம் - ஒன்பது வகைத் தவசம்.
நவநீதம் - வெண்ணெய்.
நவீனம் - புதுமை.
நாகம் - பாம்பு.
நாசம் - அழிவு; கேடு.
நாசி - மூக்கு.
நாஸ்திகன் - தெய்வமில் கொள்கையான்.
நாதம் - ஒலி; ஓசை; செப்பால்; அசரீரி.
நாதன் - தலைவன்.
நாநாவிதம் - பலவகை.
நாபிதன், நாவிதன் - மயிர்வினைஞன்.
நாமம் - பெயர்.
நாயகன் - தலைவன்.
நாயகி - தலைவி.
நாராசம் - இருப்பாணி.
நாரிகேளம் - தேங்காய்.
நிக்கிரகம் - அழிக்கை; ஒழிப்பு.
நிசம் - உண்மை; மெய்.
நிசி - இரவு.
நிச்சயம் - உறுதி; மெய்; துணிவு; திண்ணம்; தேற்றம்.
நிஷ்டூரம் - கொடுமை.
நிதரிசனம் - கண்கூடு.
நிதானம் - மதிப்பு.
நிதி - செல்வம்; வைப்பு; பொருள்.

நித்தியம் - நாடோறும்; எப்பொழுதும்; அழியாமை.
நித்திரை - தூக்கம்; துயில்; உறக்கம்; கண்படை.
நிந்தனை - இகழ்ச்சி; பழிப்பு.
நிபந்தனை - கட்டுப்பாடு; உறுதி; ஏற்பாடு.
நிபுணர் - தேர்ந்தவர்; வல்லவர்.
நிமிஷம் - நொடிப்பொழுது; நொடி.
நிமித்தம் - குறி; காரணம்; பொருட்டு; அடையாளம்.
நியதி - ஊழ்; செய்கடன்; முறை; ஒழுங்கு பிறழா நிகழ்ச்சி.
நியமம் - ஒழுங்கு; முறை; நெறி; நாட்கடன்.
நியமனம் - கட்டளை; ஒழுங்கு.
நியமித்தல் - அமைத்தல்; ஏற்படுத்தல்.
நியாயம் - நெறி; முறை; நடுநிலை.
நியாயாதிபதி - முறைமன்றத் தலைவர்; நடுவர்.
நிருணயம் - உறுதி.
நிருமூலம் - அடியற்றது; அழிவு; வேரோடு கல்லல்.
நிருவாகம் - கொண்டு நடத்தல்; பொறுப்பு.
நிருவாணம் - உடையின்மை; முண்டம்; பற்றின்மை.
நிரூபித்தல் - மெய்ப்பித்தல்; நிலைபெறுத்தல்.
நிர்ப்பந்தம் - நெருக்கம்; தொல்லை; இடர்; வலுக்கட்டாயம்.
நிவர்த்தி, நிவிர்த்தி - விடுதலை; நீக்கம்.
நீசன் - கீழ்மகன்; தாழ்ந்தோன்.
நீதி - நெறி; முறை; அறம்.
நீதிஸ்தலம் - முறைமன்றம்.
நூதனம் - புதுமை.
நேத்திரம் - கண்.

பகவன், பகவான் - கடவுள் பெருமான்.
பகிஷ்காரம் - விலக்கு.
பகிரங்கம் - வெளிப்படை.
பக்குவம் - தகுதி; நிலை
பங்கஜம் - தாமரை; முளரி.
பங்கம் - குறை; பழுது; சேறு; குற்றம்.
பசார் (பார்சி) - சந்தை; அங்காடி.
பசு - ஆ; உயிர்.
பச்சாத்தாபம் - கண்ணோட்டம்; கழிவிரக்கம்.
பஞ்சபாதகன் - ஐம்பெருங்குற்றத்தான்.
பஞ்சாட்சரம் - ஐந்தெழுத்து.
பட்சணம் - தின்பண்டம்.
பட்சம் - உருக்கம்; அன்பு.
பட்சி - பறவை; புள்.
பட்டாபிஷேகம் - முடிசூட்டல்.
பண்டிகை - பெருநாள்; திருவிழா.
பண்டிதன் - புலவன்; அறிஞன்; மருத்துவன்.
பதம் - சொல்; விலை.
பதார்த்தம் - சொற்பொருள்; பொருள்.
பதி - கடவுள்.
பதிவிரதை - கற்பரசி.
பதுமம் - தாமரை.
பதுமாவதி, பத்மாசநி - திருமகள்
பதுமை - பாவை.
பத்தர் - அன்பர்; தொண்டர்.
பத்தி, பக்தி - அன்பு; நேயம்; வரிசை.
பத்தியம் - மருந்துணவு; செய்யுள்.
பத்திரம் - இலை; ஆவணம்.
பத்திரிகை - செய்தித்தாள்; செய்தி இதழ்.
பந்தம் - உறவு; தொடர்பு; கட்டு.
பந்தி - வரிசை; தொகுதி.
பயங்கரம் - கொடுமை; அச்சம்.

பயம் - அச்சம்
பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர்
பரதேசம் - பிறர்நாடு.
பரமகதி - வீடுபேறு; மேல்நிலை.
பரம்பரை - கால்வழி; தலைமுறை.
பரவசம் - தன்னுணர்வின்மை.
பராக்கிரமசாலி - ஆண்டகை.
பரிகாசம் - பகடி; ஏளனம்.
பரிசம் - ஊறு.
பரிசுத்தம் - தூய்மை; தூப்புரவு; மாசின்மை; புனிதம்.
பரிதாபம் - இரக்கம்.
பரிமாணம் - அளவு.
பரிமிதம் - அளவுபட்டது.
பரீட்சை - தேர்வு.
பருவதம், பர்வதம் - மலை.
பரோபகாரம் - உதவி; கைம்மாறு கருதா உதவி.
பர்த்தா - கணவன்.
பலஹீனம் - வலுக்குறைவு.
பலம் - பழம்; வலிவு.
பலன் - பயன்.
பலாத்காரம், பலவந்தம் - வலுக்கட்டாயம்.
பலி - இரை; காணிக்கை; வேள்வி; கடவுளுணு; ஒப்புவித்தல்.
பலித்தல் - கைகூடுதல்; பயன்தரு
பவனம் - வீடு.
பாக்கியம் - பேறு; செல்வம்; நல்வினை.
பாசம்-தளை; கட்டு; கயிறு; அன்பு.
பாஷை - மொழி.
பாடாணம் - நஞ்சு.
பாடியம், பாஷியம் - அகலவுரை; விரிவுரை; பேருரை.
பாணி - கை.
பாதகம் - தீமை.
பாதம் - தாள்; கால்; அடி.
பாதரட்சை-காற்புடு; மிதியடி.
பாதை - வழி; பாட்டை.
பாத்தியம் - உரிமை.
பாத்திரம் - ஏனம்; கலம்; தகுதி; உரிமை.
பாநகம் - பருகுநீர்; குடிநீர்.
பாபமோசனம் - தீவினை நீக்கம்.
பாபி - தீயோன்.
பாயுரு - எருவாய்.
பாரம் - சுமை; பொறை; கடமை.
பாரியா, பாரியை - மனைவி.
பார்வதி - மலைமகள்.
பாலகன் - குழந்தை.
பாலப்பருவம் - பிள்ளைப்பருவம்.
பால்யர் - இளைஞர்.
பாவனை - கற்பனை; ஒப்பு; எண்ணம்; நினைப்பு.
பாஸ்கரன் - பகலோன்.
பிங்கலை - வலதுமூச்சு.
பிசாசு - பேய்; அலகை.
பிச்சை, பிட்சை - இரப்பு; ஐயம்.
பிச்சைக்காரன் - இரப்போன்.
பிஞ்ஞகம் - தலைக்கோலம்.
பிடிவாதம் - விடாப்பிடி.
பிதா - தந்தை; தகப்பன்; அத்தன்.
பிதிரார்ச்சிதம் - முன்னோர் தேட்டம்.
பிதிர்க்கடன் - முதாட்கள் கடன்; தென்புலத்தார் கடன்.
பிநாகம் - வில்.
பிந்நம் - சிதைவு; வேறுபாடு.
பிரகடனம் - விளம்பரம்.
பிரகதாம்பாள் - பெரியநாயகி.
பிரகஸ்பதி - வியாழன்.
பிரகாசம் - ஒளி; துலக்கம்; வெளிச்சம்.
பிரகிருதி - இயற்கை; பகுதி;
பிரக்கினை - உணர்வு.
பிரசங்கம் - விரிவுரை; சொற்பொழிவு.
பிரசண்டமாருதம் - பெரும்புயல்; பெருங்காற்று.

பிரசவம் - பிள்ளைப்பேறு; கரு வுயிர்ப்பு.
பிரசாதம் - கடவுளுணு; தேவுணு; படைப்பு; அருள்.
பிரசாரம் - பரப்புதல்.
பிரசித்தி - வெளிப்படை; அறி விப்பு; புகழ்பரவல்.
பிரசுரம் - வெளியீடு.
பிரதட்சிணம் - வலம்வருதல்.
பிரணவம் - ஓங்காரம்.
பிரதானம் - முதன்மை; சிறப்பு.
பிரதி - படி.
பிரதிகூலம் - மாறுபாடு; எதிர்.
பிரதிக்கினை - உறுதி; ஆணை; மேற்கோள்.
பிரதிஷ்டை - நிலைபெறுத்தல்; தெய்வம் கொள்ளுவித்தல்.
பிரதிதினம் - நாடோறும்; ஒவ் வொருநாளும்.
பிரதிநிதி - ஆணையாளர்.
பிரதியுபகாரம் - கைம்மாறு.
பிரதிவாதி - எதிர் வழக்காளி.
பிரதேசம் - இடம்.
பிரத்தாபம் - அறிவித்தல்; வெளிப்படுத்தல்.
பிரத்தியக்ஷம் - கண் கூடு; தெளிவு.
பிரத்தியேகம் - தனிமை.
பிரபஞ்சம் - உலகம்.
பிரபந்தம் - நூல்; நூற்றொகுதி.
பிரபல்லியம் - புகழ்; முதன்மை; சிறப்பு.
பிரபாவம் - புகழ்; பெருமை.
பிரபு - பெருந்தகை; பெருஞ் செல்வன்; தலைவன்.
பிரமசாரி - மணமாகாதவன்.
பிரமா - நான்முகன்.
பிரமாணம் - அளவை; தலைமை; மேற்கோள்; ஆணை; கட்டளை.
பிரமாண்டம் - பேருலகம்.
பிரமாதம் - மிகுதி.
பிரமானந்தம் - பேரின்பம்.
பிரமித்தல் - மலைத்தல்; திகைத் தல்; மருளல்.
பிரமேயம் - அளக்கப்படும் பொருள்.
பிரமை - மயக்கம்; அறியாமை.
பிரமோற்சவம் - பெருவிழா.
பிரயத்தனம் - முயற்சி.
பிரயாசை - முயற்சி; வருத்தம்; பாடு; உழைப்பு; தொல்லை.
பிரயாணம் - பயணம்; வழிப் போக்கு; வழிச்செலவு செலவு.
பிரயோசனம் - பயன்.
பிரலாபம் - புலம்பல்.
பிரவர்த்தி - முயற்சி; செய்கை.
பிரவாகம் - வெள்ளப்பெருக்கு.
பிரவேசம் - நுழைவு; முயற்சி.
பிரளயம் - அழிவுகாலம்; உலக ஒடுக்கம்; வெள்ளம்.
பிரளயாலகர் - இருமலக்கட்டினர்.
பிராகாரம் - கோயிற்சுற்று.
பிராகாமியம் - நிறைவுண்மை.
பிராணவாயு - உயிர்க்காற்று; உயிர்வளி; உயிர்ப்பு.
பிராணி - உயிரி; சிற்றுயிர்.
பிராது (அராபி) - முறையீடு; முறைப்பாடு.
பிராப்தம் - ஊழ்வினை.
பிராப்தி - விரும்பியதெய்தல்.
பிராமணன் - பார்ப்பான்.
பிரார்த்தனை - நேர்த்திக்கடன்; வேண்டுகோள்.
பிரியம் - அன்பு; விருப்பம்.
பிரீதி - அன்பு; உருக்கம்; அவா.
பிருதிவி - மண்.
பிரேதம் - பிணம்.
பிரேரேபித்தல் - முன்மொழிதல்.
பீசம் - மூளை; விதை.
பீடம் - இருக்கை, மேடை.
பீடை - துன்பம்; பீழை; நோய்.
பீதாம்பரம் - பொற்பட்டாடை.

புஸ்தகம், புத்தகம் - சுவடி நூல்.
புஷ்டி - பருமன்; தடிப்பு.
புட்பம், புஷ்பம் - பூ; மலர்.
புட்பராகம் - வெள்ளைக்கல்.
புட்பவதி - பூப்பானவள்.
புண்ணியதிநம் - நன்னாள்.
புண்ணியபாவம் - நல்வினை தீவினை; அறம் மறம்.
புதன் - அறிவன்.
புத்தி - உணர்ச்சி; அறிவு.
புத்திரன் - புதல்வன்; மகன்; மைந்தன்; கான்முளை.
புத்திரி - புதல்வி; மகள்.
புயபலம், புஜபலம் - தோள்வலி.
புராணம் - பழங்கதை; பழைய வரலாறு.
புராதனம் - பழைமை; தொன்மை.
புருடன் - ஆண்மகன்; கணவன்.
புருடார்த்தம் - உறுதிப்பொருள்.
புரோகிதன் - வேள்வி செய்வோன்.
புவனி, புவி - இடம்.
புனர்ப்பாகம் - சோற்றின் மறுபால்; தெளு.
பூகம்பம் - நில நடுக்கம்.
பூகோளசாஸ்திரம் - நில நூல்.
பூசாரி - வழிபாடு செய்வோன்.
பூசை - வழிபாடு; வணக்கம்.
பூஷணம் - அணிகலன்; அணி.
பூச்சியம் - இன்மை; அருமை.
பூதம் - முதற்பொருள்; முதல்; புலன்; பேய்.
பூமி - நிலம்; உலகு.
பூரணம் - நிறைவு; எல்லாம்.
பூரித்தல் - நிறைதல்.
பூர்த்தி - முடிவு; நிறைவு.
பூர்வசென்மம் - முன்பிறப்பு.
பூர்வபக்ஷம் - வளர்பிறை.
பூர்விகம் - பழைமை.
பேதம் - ஒவ்வாமை; வேற்றுமை; வேறுபாடு.
பைத்தியம் - பித்து: வெறி; கோட்டி.
பொக்கிஷம் (தெலு) - பொருட் களஞ்சியம்.
பொக்கிஷ சாலை - கருவூலம்.
போகம் - இன்பம்; துய்ப்பு; நுகர் பொருள்.
போசனம் - உணவு; சோறு; உண்டி: ஊண்.
போஷகர் - ஊட்டகர்.
போஷணை - நுகர்பொருள்.
போதனை - கற்பனை.
போதை - வெறி; மயக்கம்.
போநகம் - சோறு: உணவு.
பௌதிகசாஸ்திரம் - இயற்கைப் பொருள் நூல்.
பௌத்திரன் - பேரன்.
பௌத்திரி - பேர்த்தி.
பௌர்ணமி, பூரணை - முழுநிலா
பௌவம் - கடல்.
மகத்துவம் - மேன்மை.
மகாராசன் - அரசன்; செல்வன்.
மகா - பெரிய; மிகுதி; மேன்மை.
மகாத்மா - பெரியோன்.
மகிமா - பருமை.
மகிமை - பெருமை; மேன்மை.
மகுடம் - தலையணி; முடி.
மசானம், மயாநம் - சுடுகாடு
மச்சம் - மீன்.
மணிபூரகம் - மேல்வயிறு
மண்டூகம் - தவளை.
மதம் - கொழுப்பு; கொள்கை.
மது - கள்; தேன்.
மதுகரம் - வண்டு
மத்திபம், மத்திமம் - நடுநிலை; நடு.
மத்தியானம் - நண்பகல்.
மநசு - உள்ளம்; மனம்.
மநஸ்தாபம் - துன்பம்; மனவருத்தம்.
மநநம் - இடையறு நினைவு.
மநப்பூர்வம் - முழுமனது.
மநோகரம் - உள்ளக்கவர்ச்சி; இனிமை.

மநோராச்சியம் - மனக்கோட்டை; வீண் எண்ணம்.
மந்தம் - செரியாமை; சோம்பல்.
மந்தாரம் - மப்பு; மழைவானம்.
மந்திரம் - மறைமொழி.
மந்திரி - அமைச்சன்.
மமகாரம் - எனதென்றல்.
மரணபரியந்தம் - இறக்குமளவும்.
மரணம் - சாவு; இறப்பு, சாக்காடு.
மரணை, ஸ்மரணை - நினைவு, உணர்ச்சி.
மாசூல் (இந்துஸ்) - விளைவு.
மாதம் - திங்கள்.
மாதா - தாய்; அன்னை.
மாதாந்தம் - திங்களிறுதி.
மாத்சரியம், மாற்சரியம் - பகைமை; பொறாமை.
மாத்திரம் - மட்டும்.
மாத்திரை - அளவு.
மாநபங்கம் - பெருமைக் குறைவு; மானக்கேடு.
மாநியம் - இறையிலி நிலம்.
மாந்தம் - செரியாமை.
மாமிசபட்சணம் - ஊனுணவு.
மாமிசம் - இறைச்சி; ஊன்; புலால்
மார்க்கம் - வழி; நெறி.
மாலுமி - மீகாமன்.
மிசிரம் - கலப்பு.
மிதம் - அளவு; மட்டு.
மித்திரன், மித்துரு - நட்பு; நண்பு.
மிருகம் - விலங்கு.
மிருதங்கம் - மத்தளம்.
மிருது - மென்மை; நொய்மை.
மிலேச்சன் - அறிவிலான்; வேடன்.
மீனாட்சி - கயற்கண்ணி.
முகஸ்துதி - முகமன்.
முகூர்த்தம் - முழுத்தம்; நல் [வேளை.
முக்கியம் - முதன்மை.
முத்தி - வீடுபேறு.
முத்திரை - அடையாளம்; பொறி.
மூடர் - அறிவிலார்.
மூடிகம், மூஷிகம் - பெருச்சாளி.
மூர்க்கன் - அறிவிலான்; முருடன்.
மூர்ச்சை - அறிவுமயக்கம்; களைப்பு; உணர்ச்சியின்மை.
மூர்த்தி - கடவுள்.
மூலதனம் - முதற்பொருள்; விடுமுதல்.
மேகம் - முகில்; எழிலி; வான்.
மேடம் - ஆடு.
மோகம் - அவா; மயக்கம்; பெருவேட்கை; விருப்பம்; மருள்.
மோட்சம் - வீடு; துறக்கம்.
மௌட்டியம் - அறியாமை.
மௌனம் - அடக்கம்; பேசாமை.
யசமானன் - தலைவன்.
யதார்த்தம் - மெய்; உண்மை.
யதேச்சை - விருப்பம்; இயற்கை.
யதேஷ்டம் - மிகுதி.
யத்தனம் - முயற்சி.
யாகம் - வேள்வி.
யாசகம் - இரப்பு.
யாதவன் - இடையன்.
யாத்திரை - வழிச்செலவு; வழிப்பயணம்; ஊர்ப்பணம்.
யுகம் - ஊழி.
யுத்தகளம் - போர்முனை; அமர்க்களம்.
யுத்தி, யுக்தி - சூழ்ச்சி; பொருத்தமாறு.
யூகம் - நுண்ணறிவு; சூழ்ச்சி; கருங்குரங்கு.
யோகக்ஷேமம் - நலச்செய்தி.
யோகம் - தவநிலை; ஒன்றுதல்; மனவொருக்கம்; நல்வினை.
யோக்கியம், யோக்கியதை - தகுதி.
யோசனை - ஓர்வு; ஆராய்ச்சி; சூழ்ச்சி.
ரசம் - சுவை.
ரசா, ரஜா - விடுமுறை; ஓய்வு.
ரசீது - பற்றுமுறி.

ரஸ்தா - பெரியதெரு; பாட்டை.
ரணம் - போர்; புண்.
ருசுப்படுத்தல் - மெய்ப்பித்தல்.
ருதுமங்களஸ்நானம் - பூப்பு நீராட்டு.
ரூபம் - வடிவு; உருவம்.
வகித்தல் - பொறுத்தல் ; பூணல் ; ஏற்றல்.
வக்கிரம் - வளைவு.
வசநம் - உரைநடை.
வசந்தம் - தென்றற்காற்று ; மணம்.
வசித்தல் - உறைதல், வாழ்தல்.
வசியம், வசீகரம் - கவர்ச்சி.
வச்சிரம் - உறுதியானது.
வஸ்திரம் - ஆடை; துணி; கூறை.
வஸ்து - பொருள்.
வண்ணம், வர்ணம்- நிறம்; எழில்; அழகு.
வதநம் - முகம்.
வதந்தி - பேச்சு; பலரறிசொல்.
வதுவை - மணம்; மணப்பெண்.
வதூ - பெண்.
வநபோசனம் - சோலையுணு
வநம - காடு; தோப்பு.
வநவாசம் - காடுறை வாழ்க்கை.
வந்தனம் - வணக்கம்; வழிபாடு.
வந்தனோபசாரம் - வணக்கவுரை.
வமிசம், வம்சம் - கால்வழி; பரம்பரை; தலைமுறை.
வயசு, வயது - ஆண்டு; அகவை.
வயம் - அதுவாதல்; வழி.
வயிரம் - கூர்மை ; ஒளிமணிக்கல்; காழ்ப்பு.
வயோதிகம் - முதுமை.
வரம் - பேறு; மேன்மை; அருள்.
வருக்கம், வர்க்கம் - இனம் ; வகுப்பு; ஒழுங்கு.
வருடம் - ஆண்டு.
வருணம் - நிறம்; குலம்.
வருணனை - ஒப்பனை.
வர்த்தமானம் - செய்தி.
வல்லபம்-வலிமை; ஆற்றல்; திறம்.
வாகனம் - ஊர்தி; அணிகம்.
வாக்கியம் - சொற்றொடர்.
வாக்கு - வாயுரை; சொல்; மொழி.
வாக்குத்தத்தம் - உறுதிமொழி.
வாக்குமூலம் - உறுதிச்சொல்.
வாசகம் - சொல்.
வாசம் - மணம்; இருப்பு.
வாசனை - மணம்.
வாஞ்சை - விருப்பம்; அவா
வாதம் - காற்று; குளிர்ச்சி; காற்றுப்பிடிப்பு வழக்கு.
வாதனை - துன்பம்; வருத்தம்.
வாதித்தல் - வழக்கிடுதல்.
வாத்சல்யம் - அன்பு; விருப்பம்.
வாத்தியம் - இசைக்கருவி.
வாநரம் - குரங்கு.
வாந்தி - வாயாலெடுப்பு; கக்கல்.
வாந்திபேதி - கக்கற் கழிச்சல்.
வாமம் - அழகு; இடப்பக்கம்.
வாயு - கால்; காற்று.
வாரம் - கிழமை; அன்பு.
வாரர்வதி - பாலம்.
வார்த்தை - சொல்.
வாலிபம் - இளமை.
விகடம் - பகடி; வேடிக்கை.
விகற்பம், விகாரம் - வேறுபாடு.
விகாரம் - அழகின்மை; வேறுபாடு.
விகிதம் - நேயம்; நட்பு; விழுக்காடு.
விக்கிரகம் - உருவம்; பருப்பொருள்.
விக்கிநம் - இடையூறு; தீங்கு.
விஜயம் - வெற்றி; எழுந்தருளல்.
விசாரணை - ஆராய்ச்சி; கேள்வி.
விசாரம் - கவலை; எண்ணம்.
விசாலம், விஸ்தீரணம் - விரிவு; அகலம்; பெருக்கம்.
விசித்திரம் - வியப்பு; புதுமை.
விசுவாசம் - நம்பிக்கை; உண்மை

விசேடம் - மேன்மை; சிறப்பு.
விச்சை, வித்தை - அறிவு.
விஞ்ஞாபனம் - விண்ணப்பம்; முறையீடு; வேண்டுகோள்.
விஞ்ஞானகலர்- ஒருமலக்கட்டினர்.
விடம விஷம் - நஞ்சு.
விடயம், விஷயம் - பொருள்; நுதலியபொருள்.
விட்டுணு, விஷ்ணு - திருமால்.
விதண்டாவாதம் - அழிவழக்கு.
விதந்து, விதவை - கைம்பெண்; அறுதாலி.
விதம் - வகை; ஆறு; வழி.
விதி - ஊழ்; தெய்வம்; முறை; செயற்கை; கட்டளை.
விதேயன் - பணிவுள்ளவன்.
விஸ்தாரம் - விரிவு.
வித்தியாசம் - வேறுபாடு; ஏற்றத் தாழ்வு; வேற்றுமை.
வித்துவான் - புலவன்.
வித்து - ஒலிமுதல்.
விநயம் - வணக்கம்; அறிவு.
விநாயகர் - பிள்ளையார்.
விநாயகர்சதுர்த்தி - பிள்ளையார் நோன்பு.
விந்தை, விநோதம் - புதுமை.
விபத்து - இக்கட்டு; இடையூறு.
விபரீதம் - வேறுபாடு; திரிபு.
விபூதி - திருநீறு; நீறு.
விமோசநம் - நீக்கம்; விடுதலை.
வியபிசாரி - ஒழுக்கமிலாள்.
வியவகாரம் - வழக்கு.
வியாக்கியாநம் - விரிவுரை.
வியாசம் - கட்டுரை.
வியாச்சியம் - வழக்கு.
வியாஜம் - தலைக்கீடு.
வியாதி - நோய்; பிணி.
வியாபாரம் - வாணிபம்; கொண்டு விற்றல்; பண்டமாற்று.

விரதம் - நோன்பு; தவம்.
விருச்சிகம் - தேள்.
விருட்சம் - மரம்.
விருத்தன் - கிழவன்; முதியோன்.
விருதாசலம் - பழமலை.
விருத்தாந்தம் - வரலாறு.
விருத்தி - ஆக்கம்; பெருக்கம்.
விரோதம் - பகை; முரண்; மாறுபாடு.
விலாசம் - முகவரி.
விவகாரம் - வாய்ப்பாடு; வழக்கு.
விவசாயம் - பயிர்த்தொழில்; உழவுதொழில்; வேளாண்மை.
விவரணம் - விளக்கம்.
விவாகம் - திருமணம்; மன்றல்.
விவாதம் - வழக்கு.
விவேகம் - பகுத்தறிவு; அறிவு.
வீதம், விகிதம் - வீழுக்காடு.
வீதி - தெரு.
வீரர் - மள்ளர்; மறவர்.
வீரியம் - மறம்; ஆண்மை.
வெகுமானம் - பரிசு; கொடை.
வேகம் - விரைவு.
வேடம், வேஷம் - கோலம்.
வேதம் - மறை.
வேதனம் - கூலி.
வேதனை - துன்பம்.
வேதாந்தம் - மறைமுடிவு.
வேதாரண்யம் - மறைக்காடு.
வேதியர் - அந்தணர்; பார்ப்பார்.
வைகுண்டம் - திருமாலுலகு.
வைசூரி - அம்மைநோய்.
வைடூரியம் - பூனைக்கண்மணி; ஒளிமணி.
வைதிகம் - மறையியல்நெறி.
வைத்தியம் - மருத்துவம்.
வைபவம் - கொண்டாட்டம்; நிகழ்ச்சி.
வைராக்கியம் - வெறுப்பு.

---

தமிழ்ப் பாதுகாப்புக் கழக வெளியீடு: ௩

ஓம்

# தமிழ்ச் சொற்களைப்
# பிழை நீக்கி எழுது முறை

உள்ளுறை




கிடைக்குமிடம்:

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்.,
79, பிரகாசம் சாலை, சென்னை-1.
திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்.-1.
திருச்சி-2.
1979

23ஆம் பதிப்பு : அக்டோபர் 1978

## முன்னுரை

"தமிழ்ச் சொற்களைப் பிழைநீக்கி எழுதுமுறை" என்ற இந்நூல் பொதுவாகத் தமிழ் மக்களனைவருக்கும், சிறப்பாகத் தமிழ்மாணவர் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாது வேண்டப்படும் என்பதில் ஐயமில்லை.

தமிழ் இலக்கணம் விரிவுற்று இருக்கின்றமையாலும், தமிழ்மக்கட்குப் பிறமொழிக் கல்வியில் கருத்து மிக்கிருத்தலாலும் அவர்கள் தமிழ் இலக்கணத்தைக் கற்பதே இல்லை; கற்பினும் கருத்தூன்றிக் கற்பதில்லை. எனவே தமிழ்மக்கள் ஒருவருக்கொருவர் எழுதுங் கடிதங்களிலும், மாணவர் எழுதுங் கட்டுரைகளிலும், அரசு அலுவலர்கள் எழுதும் குறிப்புக்கள் அறிக்கைகளிலும் பிழைகள் மலிந்து காணப்பெறுகின்றன.

தமிழர் சடங்குகளின் அழைப்பிதழ்களிற் பிழைகள்; நாடகம், பல்வகை விழாக்கள் முதலியவற்றின் அறிக்கைகளிற் பிழைகள்; அறிக்கைப் பலகைகளிற் பிழைகள்; அந்தோ! எங்கே பார்த்தாலும் தமிழ்ச் சொற்களிற் பிழைகளே மலிந்து காணப்பெறுகின்றன. ஆங்கிலம் எழுதுவதில் சொற்களில் இவ்வளவிற்குப் பிழைகள் காணப்படா. எனவே, தமிழ்ச் சொற்களைப் பிழைநீக்கி எழுதுவதற்குத் துணைபுரியத்தக்க முறையில் இந்நூலின்கண் பல்வகைத் தலைப்புக்கள் கொண்ட சொற்களும் சொற்றொடர்களும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. அவற்றின் உதவி கொண்டு பெரும்பாலான பிழைகளை நீக்கி எழுதுதல் எளிதாகும்.

மிகவும் எளிய விலைக்குக் கிடைக்கப்பெறும் இந்நூற் படிகளைப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களை வாங்குமாறு தூண்டியும், தமிழ்ச்செல்வர்கள் நூற்றுக் கணக்காக வாங்கித் தமிழ்மக்கட்கு விலையின்றி வழங்கியும் எம்மை ஊக்குமாறு அவர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தார்.

# தமிழ்ச் சொற்களைப் பிழை நீக்கி எழுதுமுறை



## 1. பிழைபடு எழுதுஞ் சொற்களும் திருத்தங்களும்

| பிழை | திருத்தம் |
|---|---|
| அக்கிள் | அக்குள் |
| அகாறணம் | அகாரணம் |
| அடப்பம் | அடைப்பம் |
| அடமழை | அடைமழை |
| அடமானம் | அடைமானம் |
| அண்ணாக்கயிறு | அரைஞாண் கயிறு |
| அதிர்சம் | அதிரசம் |
| அதிஷ்டம் | அதிருஷ்டம் |
| அதுகள் | அவை |
| அப்பந் போனாந் | அப்பன் போனான் |
| (சொல்லீற்றில் 'ந்' வராது) | |
| அமக்களம் | அமர்க்களம் (போர்க்களம்) |
| அய்யா, அய்யர் | ஐயா, ஐயர் |
| அருகாமணை, அருவாமணை | அரிவாள் மணை |
| அருகாமை | அருகு (அதனருகே) |
| அருமந்த | அருமருந்தன்ன |
| அலமேலு | அலர்மேலு (மங்கை) |
| அழுகணி | அழுகுணி |
| அழும்பு | அழிம்பு |
| அவங்க, அவன்கள் | அவர்கள் |

| பிழை | திருத்தம் |
|---|---|
| அவைகள் | அவை |
| (அவை என்பதே பன்மை) | |
| அவைகளை | அவற்றை |
| அறுதலி | அறுதாலி |
| அனியாயம் | அநியாயம் |
| விஞாயகன் | விநாயகன் |
| (வடசொற்களில் றன்னகரம் ஒருபோதும் வராது.) | |
| ஆத்துக்கு | அகத்துக்கு |
| ஆம்படையாள் | அகமுடையாள் |
| ஆயிதம் | ஆயுதம் (கருவி) |
| ஆவாரம்பூ | ஆவிரம்பூ |
| ஆக்ஷி | ஆட்சி |
| (ஆள் : பகுதி) | |
| இகழ்ட்சி | இகழ்ச்சி |
| இடசன் | இடைச்சன் |
| இடது | இடம் (இடம் + கை = இடக்கை) |
| இடைபோடு | எடைபோடு (நிறைபோடு) |
| இத்துப்போதல் | இற்றுப்போதல் |
| இமையமலை | இமயமலை |
| இரண்டாந்திரம் | இரண்டாந்தரம் |
| இரும்பல் | இருமல் |
| (இருமு : பகுதி) | |
| இலும்பு | எலும்பு |

| பிழை | திருத்தம் |
|---|---|
| ஈரட்டு, ஈரெட்டு, ஈரொட்டு | |
| ஈர்வளி | ஈர்வலி |
| உசிர் | உயிர் |
| உடமை | உடைமை |
| உடம்படிக்கை | உடன்படிக்கை |
| உண்ணாமலை | உண்ணாமுலை |
| உத்தராயனம் | உத்தராயணம் |
| உத்தளவு | உற்றளவு |
| உத்திரவு | உத்தரவு |
| உமிநீர் | உமிழ்நீர் |
| ஊரணி | ஊருணி |
| உலந்து | உலர்ந்து, (காய்ந்து) |
| எகனை | எதுகை |
| மொகனை | மோனை |
| எச்சகலை | எச்சிற்கலை |
| எடக்கு | இடக்கு |
| எடஞ்சல் | இடைஞ்சல் |
| எடறு | இடறு |
| எண்ணை | எண்ணெய் (எள் + நெய்) |
| எலிமிச்சம்பழம் | எலுமிச்சம்பழம் |
| எழவு | இழவு |
| எழுகு | எஃகு |
| எளக்காரம் | இளக்காரம் |
| என்னமோ | என்னவோ |
| ஏழரைநாட்டுச் சனி | ஏழரையாட்டைச் சனி |
| ஒட்ரை | ஒட்டடை |
| ஒண்டியாய் | ஒன்றியாய் |
| ஒத்தடம் | ஒற்றடம் |
| ஒத்தெ ரெட்டை | ஒற்றை இரட்டை |
| ஒருக்கால் | ஒருகால் |
| ஒருவள் (ஒருவனுக்குப் பெண்பாற் பெயர்) | ஒருத்தி |
| ஒன்கு | ஒன்று |
| அன்ரி | அன்றி |
| (னகரத்தைத் தொடர்ந்து ரகரம் ஒருபோதும் வராது.) | |
| கடகால் | கடைக்கால் |
| கடப்பாறை | கடப்பாரை |
| கிடாரங்காய் | கடாரங்காய், கடாரநாரத்தங்காய் |
| கடுசு | கடிசு |
| கடுவு | கடுகு |
| கடைசன் | கடைச்சன் |
| கட்டிடம் | கட்டடம் (கட்டு + அடம்) |
| கட்லு | கட்டில் |
| கண்ட்ராவி | கண்ணராவி |
| கண்ணாலம் | கலியாணம் |
| கத்திரிக்கோல் | கத்தரிக்கோல் |
| கத்திரிக்காய் | கத்தரிக்காய் |
| கந்தட்டி | கண்திருஷ்டி |
| கம்பிளி | கம்பளி |
| கருவப்பிலை | கறிவேப்பிலை |
| கருப்பட்டி | கருப்புக்கட்டி (பனைவெல்லம்) |
| கவுளி | கவளி (வெற்றிலைக் கட்டு) |
| களப்பு | களைப்பு |
| கறடுமுறடு | கரடுமுரடு |
| கறுமை | கருமை, கரிய நிறம் |
| கஸ்டம் | கஷ்டம் |
| (துஸ்டன்) | துஷ்டன் |
| (டகரத்துக்குமுன் ஷ் வரும்; ஸ் வராது) | |
| காக்கா | காக்கை |
| காணும் | காணேன், காணோம் |
| காதுக்குடும்பி | காதுக்குறும்பி |

| பிழை | திருத்தம் |
|---|---|
| கார்க்கும் | காக்கும் |
| கார்ப்பான் | காப்பான் |
| (கா : | பகுதி) |
| காவரியாறு | காவிரியாறு |
| காக்ஷி | காட்சி |
| (காண் | பகுதி) |
| கிடா | கடா, (ஆட்டுக் கடா) |
| கிராணம் | கிரகணம் |
| கினவு | கனா, கனவு |
| கீத்துப்பறை | கீற்றுப்பிறை |
| குஞ்சி | குஞ்சு |
| குதுவை | கொதுவை |
| குடக்கூலி | குடிக்கூலி |
| குடுத்து | கொடுத்து |
| (கொடு : | பகுதி) |
| குதவளை | குரல்வளை |
| குத்துயிர் | குற்றுயிர் |
| குரும்பு, | குறும்பு, இடக்கு |
| குறுத்தோலை | குருத்தோலை |
| கேழ்வி | கேள்வி |
| (கேள் : | பகுதி) |
| கைநீர் | கழுநீர் |
| கைமாறு | கைம்மாறு |
| கெடிகாரம் | கடிகாரம் |
| கெரடி | கரடி |
| கெவுளி | கௌளி |
| கொட்டாபுளி | கொட்டுப்பிடி |
| கொத்தவறை | கொத்தவரை |
| கோடாலி | கோடரி |
| கோதும்பை | கோதுமை |
| கோமியம் | கோமயம் |
| கோர்த்து | கோத்து |
| கோர்வை | கோவை |
| (கோ : | பகுதி) |
| கோறைப்பாய் | கோரைப்பாய் |
| சக்காளத்தி | சக்களத்தி |
| சங்கலி | சங்கிலி |

| பிழை | திருத்தம் |
|---|---|
| சந்தணம் | சந்தனம் |
| சமயல் | சமையல் |
| (சமை : | பகுதி) |
| சவதி | சகதி |
| சாக்கிறதை | சாக்கிரதை |
| சாம்பராணி | சாம்பிராணி |
| சாய்ங்காலம் | சாயங்காலம் |
| சாற்றுக்கவி | சாத்துக்கவி |
| சிகப்பு | சிவப்பு |
| (சிவ : | பகுதி) |
| சிக்கணம் | சிக்கனம் |
| சிய்யாழி | சீகாழி |
| சிரோன்மணி | சிரோமணி |
| சிலது | சில |
| சிலவு | செலவு |
| (செல் : | பகுதி) |
| சிறுவாடு | சிறுபாடு |
| சுந்திரம் | சுந்தரம் |
| சுவற்றில் | சுவரில் |
| சுவற்றை | சுவரை |
| (சுவர் : | பகுதி) |
| செத்தபொறு | சற்றேபொறு |
| செரங்கு | சிரங்கு |
| தட்சணாயனம் | தட்சிணாயனம் |
| தடுமாட்டம் | தடுமாற்றம் |
| (தடுமாறு : | பகுதி) |
| தண்ணி மூட்டான் | தண்ணீர் விட்டான் (செடி) |
| தலகாணி | தலையணை |
| தலைசன் | தலைச்சன் |
| தவக்களை | தவளை |
| தன்டம் | தண்டம் |
| வன்டி | வண்டி |
| (டகரத்துக்குமுன் னகரம் வராது; ணகரமே வரும்) | |
| தாவடம் | தாழ்வடம் |
| தாவலை, தேவலை | தாழ்வில்லை |
| தாவாரம் | தாழ்வாரம் |

| பிழை | திருத்தம் |
|---|---|
| தாருக்கோழி | தாராக்கோழி |
| திறுமுறுகாற்றுப்படை | திருமுருகாற்றுப்படை |
| திருவவதரித்தார் | திருவவதாரஞ் செய்தார் |
| திருவாணி | திருகாணி |
| திரேகம் | தேகம் |
| தீவரம் | தீவிரம் |
| தீவாளி | தீபாவளி |
| | தீபாவலி |
| துகையல் | துவையல் |
| துகை | தொகை |
| (தொகு : பகுதி) | |
| துடங்குதல் | தொடங்குதல் |
| துடப்பம் | துடைப்பம் |
| துடர் | தொடர் |
| துடை | தொடை |
| (தொடு : பகுதி) | |
| துபாஷ் | துவிபாஷி |
| துலைந்தது | தொலைந்தது |
| துளிர் | தளிர் (மாந்தளிர்) |
| துறவுகோல் | திறவுகோல் |
| துறுத்தி | துருத்தி |
| துறும்பு | துரும்பு |
| தெண்டம் | தண்டம் |
| தெண்டனை | தண்டனை |
| தெத்துவாய் | தெற்றுவாய் |
| தைவாளை | தைவேளை |
| தொந்திரவு | தொந்தரவு |
| தொந்திரை | தொந்தரை |
| தொப்புள் | கொப்பூழ் |
| தொவக்கம் | துவக்கம் |
| நசுகுணி | நசுக்குணி, நசுங்குணி |
| நஞ்சை | நன்செய் |
| நடலம் | நடம், நடனம் |
| நல்லெண்ணை | நல்லெண்ணெய் |
| நாத்தம் | நாற்றம் |

| பிழை | திருத்தம் |
|---|---|
| நாராங்கி | நாதாங்கி |
| நிகளம் | நீளம் |
| (நீள் : பகுதி) | |
| நீச்சுத்தண்ணீர், நீஸ்தண்ணி | நீராகாரம் |
| நீத்துப்பாவுகம் | நீற்றுப்பாகம் |
| நெலவரம் | நிலவரம் |
| நேத்தி | நேர்த்தி |
| நேத்து | நேற்று |
| நொங்கு | நுங்கு |
| நோம்பு | நோன்பு |
| படிக்கிர | படிக்கிற |
| படிக்கின்ர | படிக்கின்ற |
| படிக்கிரான் | படிக்கிறான் |
| (கிறு, கின்று என்ற இடைநிலைகளில் ர ஒருபோதும் வராது.) | |
| பட்டிணி | பட்டினி |
| பண்டுவர் | பண்டிதர் |
| பதட்டம் | பதற்றம் |
| (பதறு : பகுதி) | |
| பதியம் | பதிகம் |
| பந்றி | பன்றி |
| செந்று | சென்று |
| [றகரத்துக்குமுன் னகரமே (றன்னகரம்) வரும்] | |
| பயிற் | பயிர் |
| அரசற் | அரசர் |
| தவிற் | தவிர் |
| (சொல்லீற்றில் வல்லின-ற்-ஒருபோதும் வராது.) | |
| பயிறு | பயறு |
| பலது | பல |
| பன்து | பந்து |
| வன்தான் | வந்தான் |
| [தகரத்துக்குமுன் நகரமே (தந்நகரம்) வரும்.] | |

| பிழை | திருத்தம் |
|---|---|
| பல்லாங்குழி<br>பள்ளாங்குழி | பன்னாங்குழி<br>(பதினான்குகுழி) |
| பளனியப்பன் | பழனியப்பன் |
| பாவக்காய் | பாகற்காய் |
| பிறப்படுதல் | புறப்படுதல் |
| பிசஞ்சு | பிசைந்து |
| புஞ்சை | புன்செய் |
| புட்வை | புடைவை |
| புடுங்குதல் | பிடுங்குதல் |
| புட்டு | பிட்டு |
| புணையல் | பிணையல் |
| புழக்கடை | புழைக்கடை<br>புறக்கடை |
| புழுக்கை | பிழுக்கை |
| (ஆட்டுப் பிழுக்கை) | |
| புளவை | பிளவை |
| புஸ்த்தகம் | புத்தகம் |
| புஷ்ப்பம் | புஷ்பம் |
| இஷ்ட்டன் | இஷ்டன் |
| (ஸ், ஷ், என்னும் எழுத்துக் கட்குப் பின் மெய்யெழுத் துக்கள் வாரா.) | |
| பூசினி | பூசுணை |
| பூளை | பீளை |
| (கண் பீளை) | |
| பெத்தியா | பார்த்தாயா |
| பெத்துக்கிட் டேன் | பெற்றுக் கொண்டேன் |
| பொரளி | புரளி |
| பேரில் | மேல்(பொருள் மேல்) |
| பொடைத்தல் | புடைத்தல் |
| பொம்பிளை | பெண்பிள்ளை |
| பொம்மனாட்டி | பெண்பிள்ளை |
| போக்கிரி | போக்கிறி (பொய்+கிறி) |
| போறும் | போதும் |
| மகிட்சி | மகிழ்ச்சி |
| மணத்தக்காளி | மணித்தக்காளி |

| பிழை | திருத்தம் |
|---|---|
| மறுவீடு | மருவீடு (மரு-பொருந்துதல், மருவீடு அழைப்பு) |
| மனவி | மனைவி |
| (மனை : பகுதி) | |
| மாத்தினான் | மாற்றினான் |
| மானம்பார்த்த பூமி<br>மானாங்காணி யாய் | வானம்பார்த்த பூமி<br>வானாங்காணி யாய் |
| மானாமாரி | வானாவாரி |
| மாக்ஷி | மாட்சி |
| (மாண் : பகுதி) | |
| முடுக்கு | மிடுக்கு |
| முந்தாணி | முந்தானை |
| (முன்றானை : முன் + தானை) | |
| முயற்சித்தான் | முயன்றான் |
| முழிக்கிறது | விழிக்கிறது |
| (விழி : பகுதி) | |
| முழிந்தான் | உமிழ்ந்தான் |
| (உமிழ்: பகுதி) | |
| முழுங்கு | விழுங்கு |
| முறுகன் | முருகன் (முருகு = இளமை, அழகு) |
| மெக்கட்டு | மெய்க்காட்டு (கூலிவேலை) |
| மெரித்தான் | மிதித்தான் |
| மொழுகடி | மகிழடி |
| மோர்ந்து,<br>முகர்ந்து | மோந்து |
| (மோ : பகுதி) | |
| மோவாய்க் கட்டை | முகவாய்க் கட்டை |
| யிலை | இலை |
| யீரம் | ஈரம் |
| யெருது | எருது |
| யேனம் | ஏனம் |

| பிழை | திருத்தம் |
|---|---|

(யி, யீ, யெ, யே என்னும் எழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் வாரா.)

| பிழை | திருத்தம் |
|---|---|
| ரம்பை | அரம்பை |
| ரம்பம் | இரம்பம் |
| ராகம் | இராகம் |
| ராமன் | இராமன் |
| ரெட்டை | இரட்டை |
| ரெண்டகம் | இரண்டகம் |
| ரேகை | இரேகை |
| ரொம்ப | நிரம்ப |
| ரோமம் | உரோமம் |

{ர, ரா, ரே, ரொ, ரோ என்னும் எழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் வாரா.)

| பிழை | திருத்தம் |
|---|---|
| ரூபாய் | ரூபா |
| லக்கம் | இலக்கம் |
| லத்தி | இலத்தி |
| லவணம் | இலவணம் |
| லெக்கு | இலக்கு |

(லகரம் மொழிக்கு முதலில் வாராது.)

| பிழை | திருத்தம் |
|---|---|
| வடவம் | வடகம் |
| வயறு | வயிறு |
| வரக்குள்ளே | வரற்குள்ளே |
| வலது | வலம் |
| வலது கை | வலக்கை (வலம் + கை) |
| வவுத்துவலி | வயிற்றுவலி |
| வழவு | வளவு, வளைவு, வீடு |
| வாக்கப்படு | வாழ்க்கைப்படு |
| வாணலை | வாழ்நாளை, வாணாளை |
| வாய்வு | வாயு |
| வேவ்ஷ்டி | வேட்டி (வெட்டு:பகுதி) |
| வைக்கல் | வைக்கோல் |

| பிழை | திருத்தம் |
|---|---|
| வாழ்த்தும்படிக் கோறுதல் | வாழ்த்தும்படி கோருதல் |
| விசிரி | விசிறி |
| விடியங்காட்டி | விடியுமுன் |
| விரால் | வரால் |
| விரை, வெரை | விதை |
| விக்கும், விர்க்கும் | விற்கும் (வில்:பகுதி) |
| முயற்ச்சி, முயர்ச்சி | முயற்சி (முயல்:பகுதி) |
| கற்ப்பு, கர்ப்பு | கற்பு (கல்:பகுதி) |

வல்லின ற் என்னுமெழுத்திற்குப் பின் க், ச், ப் ஒருபோதும் வாரா.)

| பிழை | திருத்தம் |
|---|---|
| வுண்டு | உண்டு |
| வூது | ஊது |
| வொட்டகம் | ஒட்டகம் |
| வோடம் | ஓடம் |

(வு, வூ, வொ, வோ என்னும் எழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் வாரா.)

| பிழை | திருத்தம் |
|---|---|
| விளார், விளாறு- | வளார் |
| வெங்கலம் | வெண்கலம் |
| வெண்டக்காய் | வெண்டைக்காய் |
| வெண்ணை | வெண்ணெய் (வெள் + நெய்) |
| வெய்யல் | வெயில், வெய்யில் |
| வெரக்கடை | விறற்கிடை |
| வெள்ளங் காட்டி | வெள்ளெனக் காட்டி |
| வென்னீர் | வெந்நீர் |
| வேக்குரு | வேர்க்குரு |
| வேணும் | வேண்டும் |
| வேண்டாம் | வேண்டா (வேண்டும்என்பதற்கு எதிர்மறை) |

| பிழை | திருத்தம் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ரூமன் | இராமன் | னண்டு | நண்டு |
| ரோமம் | உரோமம் | னாரை | நாரை |
| குறுமா | குருமா | னிலம் | நிலம் |
| அபறாதம் | அபராதம் | னுட்பம் | நுட்பம் |
| அலமாறி | அலமாரி | னொண்டி | நொண்டி |
| பிறமாணம் | பிரமாணம் | னோக்கம் | நோக்கம் |
| பிறாமணன் | பிராமணன் | (ன, னா, னி, னு, னொ, னோ என்னும் எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வாரா. தந்நகரமே வரும்) | |
| (வடசொல், திசைச்சொற்களில், றகரம் ஒருபோதும் வராது; ரகரமே வரும்) | | ஸ்ரீகள் | ஸ்திரீகள் |

---

## 2. ரகர, றகரச் சொற்களின் வேறுபாடுகள்

அரமனை, அரண்மனை - அரச மாளிகை
அரம் - ஒரு கருவி
அற - நீங்க, மிக
அறம் - தருமம், ஈகை
அரி - திருமால், சிங்கம், அறுத்தல்
அறி - தெரிந்துகொள்
அரிசி - நெல்லரிசி
அறிகுறி - அடையாளம்
அரவு - பாம்பு
அறவு - நீக்கம், முடிவு
அரிவாள் - கொடுவாள்
அரிவை - தெய்வப்பெண்
அரு - அரிய, அருமையான
அறு - துண்டி, வெட்டு
அருகு - பக்கம், அண்மை
அறுகு - ஒரு புல்
அருந்து - உண், சாப்பிடு
அறுந்து - அறுபட்டு
அரும்பு - மொட்டு, மலர் அரும்பு
அருவருப்பு - வெறுப்பு
அருவி - நீர்வீழ்ச்சி
அறுபதம் - வண்டு
அறுகீரை - ஒருவகைக்கீரை
அரை - பாதி, இடை, (மாவை அரை)
அறை - (வீட்டின்) அறை, கன்னத்தில் (அறை), சொல்
அறைகூவல் - போருக்கழைத்தல்
அலரி - ஒருவகைப் பூ
அலறி - கதறி
ஆர - நிறைய
ஆற - தணிய, புண்ணாற
ஆரம்பம் - துவக்கம்
ஆரல் - ஒருவகை மீன்
ஆறு - வழி, நதி
(அவ்வாறு - அவ்விதம்)
இர (இரப்பு)- வேண்டு, பிச்சையெடு
இற (இறப்பு) - கட, சா
இறகு - பறவையின் இறகு
இரங்கு - மனமுருகு; அருள்கூர்
இறங்கு - கீழிறங்கு
இடறி - கால்தவறி
இரவு - இராத்திரி, அல்
இரு - உட்கார்

இறு (இறுத்தல்)-அறு; வடி (நீர்)
இறுதி - முடிவு
கைஇருப்பு - கையிலுளது
இறுமாப்பு - செருக்கு, மமகாரம்
இராட்டு - கைராட்டினம்
இரும்பு - ஓர் உலோகம், கரும் பொன்
இறும்பு - சிறுமலை, புதர், குறுங் காடு
இறும்பூது - வியப்பு, தாமரைப் பூ
இரை - விலங்குணவு, தீனி, ஒலி
இறை - சிதறு, வரி, அரசன், கடவுள், (தண்ணீர்) இறை
இரைச்சல் - ஒலிமிகுதி
இறைச்சி - மாமிசம், புலால்
ஈர் - இரண்டு, பேன் முட்டை
ஈறு - இறுதி, முடிவு, பல்லீறு
உறக்கம் - தூக்கம்
உரல் - மாவிடிக்கும் (உரல்)
உறல் - பொருந்துதல், அடை தல்
உரவு - வலிமை, உப்பு
உறவு - கலந்து வாழ்தல்
உராய்தல் - தேய்தல்
உரி - கழற்று, தோலுரி, மரப் பட்டை, அரைப்படி, சுதந் தரம்
உறி - நெய், (மோர்) உறி
உரிமை - சுதந்தரம்
உரிய - சொந்தமான
உறிய - உறிஞ்ச
உரு - வடிவம், உருவம்
உறு - பொருந்து, மிகுதி
உருக்கு - இளகச்செய்
உருசி - சுவை
உறுதி - திடம்
உறுப்பு - அவயவம்
உருமு - இடி
உறுமு - கர்ச்சி
உருள் - சுழல்
உருவி - நாயுருவி, பிடுங்கி
உரை - சொல், பேசு
உறை - இறுகு, மூடி, இடம், (தலையணை உறை)
உறைப்பு - காரம்
உற்பத்தி - தோற்றம், துவக்கம்
ஊர - நகர, பரவ
ஊற - சுரக்க, நனைய
ஊருணி - ஊரார் உண்ணும் நீர்க்குளம்
ஊறு - இடையூறு
ஊறுகாய் - ஊறவைத்த காய்
எரி - தீ, நெருப்பு, எரிதல்
எறி - வீசு, வீசி யெறி
எரு - வரட்டி, மலம்
எருமை - மாடு (காரா)
எருக்கு - ஒரு செடி
எறும்பு - ஒரு பிராணி
ஏரி - பெரிய குளம், நீர்நிலை
ஏறி - மேலே ஏறி
ஏர் - உழவு ஏர்
ஏராளம் - மிகுதி
ஏமாறு - வஞ்சிக்கப்படு
ஏற்பாடு - திட்டம்
ஐயுறவு - சந்தேகம்
ஒரு - ஒன்றாகிய
ஒறு - தண்டி
ஒற்றன் - தூதன்
கர - ஒளிந்துகொள்
கற - பால் கற, பீச்சு
கரி - யானை, அடுப்புக்கரி
கறி - கடி; (காய்) கறி; மிளகு
கருத்து - எண்ணம்
கறுத்து - கோபித்து, சினந்து
கருப்பு - பஞ்சம்
கறுப்பு - கருமைநிறம்
கரும்பு - கன்னல்
கருமாயம் - மிகுதியான விலை
கருவி - ஆயுதம்
கறுவி - கோபித்து
கரை - ஓரம், குளக்கரை

கறை - களங்கம், மாசு, குற்றம்
கறையான் - செல்
கவர் - அபகரி
கவறு - சூதாடு கருவி
கவற்சி - துன்பம்(கவல்: பகுதி)
காரணம் - முதல், ஏது
காரியம் - செயல்
கிரி - மலை
கார் - மேகம்
காறல் - காறியுமிழ்தல்
கிராமம் - சிற்றூர்
கீரி - ஒருவகைப் பிராணி
கீறி - கிழித்து, எழுதி
குரங்கு - வானரம், மந்தி
குறங்கு - தொடை
குறடு - திண்ணை, பற்றுக்குறடு
குரம் - குளம்பு
குறம் - குறத்தி சொல்லுங் குறி
குரவன் - பெரியோன், ஆசான்
குறவன் - ஒரு குலத்தான்
குறி - அடையாளம்
குறிச்சி - குறிஞ்சி நிலத்தூர்
குறிப்பு - உள்ளக் கருத்து, சைகை
குரவை - கூத்து
குறவை - ஒருவகை மீன்
குறள் - ஒருவகைப்பா, (திருக் குறள்)
குரு - ஆசிரியன், சிறு பரு
குறு - குட்டையான
குருதி - இரத்தம்
குருகு - நாரை
குறுகு - அணுகு, கிட்டு
குருக்கு - ஒரு செடி
குறுக்கு - நெடுமுதுகு, நடு, இடை
குருடு - கண் குருடு
குறும்பி - காதுக்குறும்பி
குறும்பு - பொல்லாங்கு
குரும்பை - தென்னை, பனை முதலியவற்றின் பிஞ்சு
குறும்பை - ஓர் ஆடு
குரைத்தல் - குலைத்தல்
குறைத்தல் - சுருக்குதல்
கூற்று - மொழி, யமன்
கூரிய - கூர்மையான
கூறிய - சொல்லிய
கூறு - சொல், பங்கு
கூரை - முகடு, வீட்டின் மேற் புறம்
கூறை - துணி, புடைவை
கூர்தல் - மிகுதல்
கூர்மம் - ஆமை
கோரல் (கோருதல்) - விரும்பு தல், வேண்டுதல்
கோறல் - கொல்லுதல்
சரக்கு - பண்டம்
சரசுவதி - கலைமகள்
சரடு - முறுக்கு நூல்
சறுகுதல் - வழுகுதல்
சாருதல் - சார்ந்திருத்தல்
சாறுதல் - தானியம் பெருக்கு தல்
சாறு - இரசம், (பனஞ்) சாறு
சிரங்கு - நோய்
சிரசு - தலை
சிரைத்தல் - முடி எடுத்தல்
சிறப்பு - மேன்மை
சிறுவன் - இளையன்
சிறை - சிறைச்சாலை
சீரகம் - ஒரு கறிப்பொருள்
சீரிய - சிறந்த
சீறிய - கோபித்த
சுரங்கம் - (பொன்) சுரங்கம்
சுரா - கள்
சுறா - ஒருவகை மீன்
சுருக்கு - சுருங்கச் செய்
சுறுக்கு - விரைவு
சுறுசுறுப்பு - மிகுந்த ஊக்கம்
சுரை - ஒருவகைக் கொடி
சுவர் - மதில்
சுவறு - வற்று, (நீர்) சுவறுதல்
சூரன் - வீரன்

சூரியன் - ஞாயிறு, பகலவன்
சூறை - கொள்ளை, புயற்காற்று
செரித்தல் - சீரணமாகுதல்
செறித்தல்-திணித்தல்; அடக்குதல்
செரு - போர்
செறு - வயல், கோபி, திணி
செருக்கு - அகங்காரம்
சேரல் - கிட்டல்
சேறல் - செல்லுதல்
சேறு - மண்குழம்பு
சொரி - பொழி, கொடு
சொறி - தினவுநோய் (சொறி சிரங்கு)
சோறு - சாதம்
சோர்வு - தளர்ச்சி, மெலிவு
தரி - அணி, பொறு, தங்கு
தறி - வெட்டு, துணி நெய்யுந் தறி, கம்பம்
தரு - மரம்
தறு - கட்டு, முடி
தறுகண் - அஞ்சாமை
தரை - பூமி
தவறு - குற்றம்
தவறி - பிசகி
தவிர் - நீக்கு
தார் - பூமாலை
தாறு - குலை, முட்கோல்
தாறுமாறு - குழப்பம்
திற - மூடியைத் திற
திரம் - உறுதி நிலை
திறம் - வல்லமை, பக்கம், வகை
திரள் - கூட்டம்
திருகு - முறுக்கு
திருடன் - கள்ளன்
திறமை - ஆற்றல்
திறவுகோல் - சாவி
திரும்பு - மீண்டுபோ
திரை - அலை, திரைச்சீலை
திறை - கப்பம், அரசிறை
துறக்கம் - வீடு
துரவு - பெரிய கிணறு
துறவு - துறத்தல், ஆசையை ஒழித்தல்
துரத்தல் - செலுத்துதல்
துறத்தல் - நீங்குதல், ஒழித்தல்
துரு - இரும்பழுக்கு
துறு - நெருங்கு, அமுக்கு
துருத்தி - உலையூது கருவி
துருவல் - கடைதல், துளைத்தல்
துரை - பிரபு, தலைவன்
துறை - நீர்நிலையில் இறங்குமிடம், ஆறு, பிரிவு
துறைமுகம் - கப்பல் தங்குமிடம்
தூரம் - தொலை
தூர் - வேர், அடி, சேறு
தூறல் - சிறுமழை
தெரி - தோன்று, அறி, பொறுக்கி எடு
தெரு - வீதி
தெறி - சிதறு, விரலால் உந்து
தெறு - அழி
தேரல் - ஆராய்தல், பயிலல்
தேறல் - தெளிதல், தேன், தேர்வில் தேறுதல்
தேர்வு - பரீட்சை, சோதனை
தேர் - இரதம்
தோறும் - (நாள்) தோறும்
நருக்கு - நசுக்கு
நறுக்கு - துண்டி
நரை - வெண்மயிர், தலைநரை
நறை - தேன், வாசனை
நாரி - பெண்
நாறி - நாற்றம் வீசி
நிறம் - வருணம்
நிரம்பிய - நிறைந்த
நிருத்தம் - நடம், நடனம்
நிறுத்தம் - நிறுத்துதல்
நிருபம் - கடிதம்
நிறுத்தல் - எடை போடுதல், நிற்கச் செய்தல்

நிரை - வரிசை, மந்தை, ஓர் அசை
நிறை - நிறைவு, மனவடக்கம், கற்பு
நீறு - திருநீறு, விபூதி
நெரி - உடை, நெருங்கு, நசுக்கு
நெறி - மதம், வழி, புருவத்தை வளை, நீதி
நொருங்கி - அணுகி
நெருப்பு - தீ
நேரம் - பொழுது
நேருதல் - ஏற்படல்
பரந்த - பரவிய
பறந்த - பறந்த (பறவை)
பரபரப்பு - அவசரம்
பரவை - கடல்
பறவை - பட்சி, புள்
பரம்பு - பரம்புப் பலகை
பறம்பு - ஒரு மலை
பரி - குதிரை, இரங்கு, விரும்பு
பறி - பிடுங்கு, தோண்டு, அபகரி
பரிசு - வெகுமதி
பரிந்து - அன்புகொண்டு
பருந்து - ஒரு பறவை
பருத்தி - பஞ்சு
பருவம் - காலம்
பரை - பார்வதி
பறை - சொல், தம்பட்டம்
பாரை - கம்பி, கடப்பாரை
பாறை - கற்பாறை, கல்நிலம்
பிர - பிர(பஞ்சம்), வடமொழி உபசர்க்கம்
பிற - மற்ற, தோன்று
பிறகு - பின்
பிறப்பு - தோற்றம்
பிரயாணம் - வழிப்போக்கு
பிரயோசனம் - பயன்
பிரிவு - விட்டுப் பிரிதல்
புரணி - ஊன்
புறணி - புறங்கூறல், மட்டையின் உட்பக்கம்
புரம் - பட்டணம், நகர், காப்பு
புறம் - பக்கம், முதுகு, பின்பு, வெளி
புறப்படு - பயணம்போ
புறப்பாடு - பரு, பயணம்
புரவு - காப்பு, ஆட்சி
புறவு - புறா, புறம்போக்கு
பெரு - பெரிய
பெறு - அடை, பிள்ளை பெறு
பேர் - பெயர்
பேறு - பாக்கியம், இலாபம், புண்ணியம்
பொரி - நெற்பொரி
பொறி - தீட்டு, எழுது, இயந்திரம், தீத்துகள், புலனுறுப்பு
பொரியல் - பொரியல் (கறி)
பொரு - ஒப்பாகு, போர்செய்
பொறு - பொறுத்துக்கொள், தாங்கு
பொருட்டு - காரணம்
பொருத்தம் - தகுதி
பொருக்கு - சோற்றுவடு, தோசைப் பொருக்கு
பொறுக்கு - தெரிந்தெடு
பொருப்பு - மலை
பொறுப்பு - உத்தரவாதம், கடமை
பொறுமை - சாந்தம், சகிப்புத் தன்மை
பொருமை - மனவெரிச்சல்
மர - கடினமாகு, உணர்ச்சியறு
மற - மறந்துபோதல்
மரம் - விருட்சம்
மறம் - வீரம், பாவம், கொலை
மரி - சா, இற
மறி - தடு, மான், ஆட்டுக்குட்டி
மரு - வாசனை
மறு - குற்றம், களங்கம், மற்ற
மருகு - காட்டுமல்லிகை
மறுகு - மயங்கு, நெடுந்தெரு
மருகி - மருமகள்
மறுகி - தயங்கி

மருமகள் - மகன் மனைவி
மருமகன் - மகள் கணவன்
மருவல் - பொருந்துதல்
மருவீடு - மணமக்களை வீட்டுக்கழைத்தல்
மரை - ஒரு மான், திருகுசுரை, தாமரை
மறை - ஒலித்தல், வேதம், இரகசியம்
மாரன் - மன்மதன்
மாறன் - பாண்டியன்
மாரி - மழை
மாறி - வேறுபட்டு
முறம் - சுளகு
முரண் - மாறுபடுதல்
முரி - ஒடி, கெடு
முறி - தளிர், இலை, பட்டையம்
முருக்கு - ஒரு மரம்
முறுக்கு - திருக்கு, அரட்டு, தின்பண்டம்
முருகன் - அழகன், கந்தன்
முருகு - வாசனை, அழகு, இளமை
முறுகு - திருகு, பதங் கடந்து வேகு
முருங்கை - ஒரு மரம்
முருடு - முரடு
மெய்யுரை - உண்மைச் சொல்
மெய்யுறை - கவசம், அங்கி
வரம் - அருள்
வறம் - வறட்சி
வரலாறு - சரித்திரம்
வரன்முறை - அடிப்பட வந்த முறை
வருத்தல் - துன்பப்படுத்தல்
வறுத்தல் - காய்களை வறுத்தல்
வறுவல் - வறுத்தகறி
வறுமை - தரித்திரம் [வரி
வரை - மலை, மூங்கில், அளவு,
வறை - துவட்டற்கறி, பொரித்த காய்கறி
வரையறை - எல்லை
வர்க்கம் - இனம்
வற்புறுத்து - வலிந்துசொல்
விசிறி - காற்றிசை கருவி
விரகு - தந்திரம்
விறகு - எரிக்குங் கட்டை
விரல் - கைவிரல்
விறல் - வெற்றி, வலிமை
விருப்பம் - ஆசை
விருந்து - உணவளித்தல்
விரை - விதை, வேகமாகு
விரைவு - வேகம்
விறை - கடினமாகு, மரத்துப் [போ
வீரி - காளி
வீறி - ஓங்கி
வீறிட்டு - சத்தமிட்டு அலறி
வீற்றிரு - சிறந்திரு
வெரு - பயம், அச்சம்
வெறு - பகை, மிகுதல், வெறும்புக்கொள்
வெறுமை - ஒன்றுமில்லாமை
வேர் - மரவேர்
வேறு - மற்ற

[குறிப்பு: காறல், காரல்; சுறண்டு, சுரண்டு; சுறீர், சுரீர்; தறுவாய், தருவாய்; நறுக்கு, நருக்கு; முறி, முரி என்னுஞ் சொற்கள் வேறுபாடின்றி வழங்குகின்றன.]

---

# 3. ளகர, ழகரச் சொற்களின் வேறுபாடுகள்

அளகம் - பெண்மயிர்
அளகு - பெண் பறவை, கோழி
அழகு - அலங்காரம்
அளம் - உப்பளம்
அளி - வண்டு, அருள், கா
அழி - கெடு
அழுக்கு - மாசு, பொறாமை
அளை - துழாவு, கல், தயிர், குகை
அழை - கூப்பிடு, பெயரிடு
அள் - அள்ளு
ஆழம் - பள்ளம்
ஆளி - அரசன், ஆள்வோன், சிங்கம்
ஆழி - கடல், சக்கரம், மோதிரம்
ஆள் - புழங்கு, அரசுசெய், ஆண் மகன், ஊழியன்
ஆழ் - அமுக்கு, தாழ்த்து
ஆள்வார் - ஆளுவோர்
ஆழ்வார் - திருமால் அடியவர்
இளகு - நெகிழ்தல்
இழ - தொலை, போக்கடி
இளை - மெலிதல், களைத்தல்
இழை - தேய், செய், நூல்
உளம் - உள்ளம்
உளவு - வேவு, மறைவு
உழவு - பயிர்த்தொழில், வருத்தம், முயற்சி
உளறு - பிதற்று
உளி - தறிக்குங் கருவி
உழி - இடம், ஏழாம் வேற்றுமை உருபு
உளுக்கு - சுளுக்கு
உழுந்து - ஒருவகைத் தானியம்
உளை - நோகு, சேறு, பிடரிமயிர்
உழை - வருந்தி வேலைசெய், மான், பக்கம்
எழுதல் - உயர்தல், கிளம்புதல், வரைதல்
எழுத்தாணி - ஓலையிலெழுதுங் கருவி
எள் - நிந்தை, ஒரு தானியம், எளிமை
எளிது - இலேசு
எளிய - அற்ப
ஒளி - மறை, வேதம், வெளிச்சம், புகழ்
ஒழி - அழி, நீக்கு
களம் - போர்க்களம், நெற்களம்
களர் - விளையா நிலம்
களவு - திருட்டு
களி - மகிழ்ச்சி
கழி - நீக்கு, கோல், மிகுந்த
களை - முகவழகு, நீக்கு, இளை
கழை - கோல், கரும்பு, மூங்கில்
கள் - மது
களிம்பு - துரு, பூச்சு மருந்து
கழுகு - ஒரு பறவை
கழுதை - ஒரு விலங்கு
கழுவல் - தூய்மை செய்தல்
காளி - துர்க்கை
காழி - சீகாழி
காளை - எருது, வாலிபன்
கிளவி - சொல் (எழுதாக்கிளவி)
கிழவி - உரியவள், முதியாள்
கிழி - கிழித்தல், பணமுடிச்சு
கீள் - கோவணம், தோண்டு
கீழ் - கீழே, தாழ்வு
குளம் - தடாகம்
குளவி - வண்டுவகை
குழவி - குழந்தை
குளம்பு - விலங்கின் அடி
குழம்பு - சேறு, காய்கறிக் குழம்பு
குளி - முழுகு
குழி - கிடங்கு, பள்ளம்
குழை - குண்டலம், தளிர்
குளிர் - குளிர்ச்சி, நடுக்கம்

குழு - கூட்டம்
கூளம் - குப்பை, வைக்கோல் கூளம்
கூழம் - எள்
கூளி - பேய்
கூழி - குள்ளப் பசு
கேள் - செவிகொடு, நட்பு
கேழ் - பொருந்து, நிறம், ஒளி
கேழ்வு - தோணிக்கூலி
கேழ்வரகு - ஒரு தானியம்
கேளி - மகளிர் விளையாட்டு
கொளு - பொருந்து
கொழு-கொழுப்பாகு, ஏர்க்காறு
கொளுந்து - எரி
கொழுந்து - இளஇலை, மருக்கொழுந்து
கோளி - கொள்பவள், ஆல், அத்தி
கோழி - ஒரு பறவை
கோள் - புறங்கூறல்
சுளி - முகங்கோணு, கோபி
சுழி - வளை, வட்டமிடு,நீர்ச்சுழி
சூள் - ஆணை
சூழ் - ஆராய், முற்றுகை இடு
சோளம் - ஒரு தானியம்
சோழம் - ஒரு நாடு
தளை - கட்டு, விலங்கு
தழை - இலை, தழைத்தோங்கு
தாளம் - இசைக்கால வளவு
தாழம் - தாழ்வு
தாளி - பனை
தாழி - பெரும்பானை, சாடி
தாள் - கால், முயற்சி, செடிமுதலியவற்றின் அடித்தண்டு
தாழ் - கீழாகு, கதவடைகோல், பணி
தெளி - தெளிவாகு, சிதறு
தெழி - அதட்டு, வருத்து
தொளை - துவாரம்
தோளன் - தோளையுடையவன்
தோழன் - நண்பன்
நாளி - மூங்கில், நாய்
நாழி - படி, நாழிகை
நுழை - புகு
பழி - குற்றம்
பளிச்சு - ஒளிவீச்சுக் குறிப்பு
பளு - கனம்
பழு - முதிர், கனி
பாளை - பூமூடு மடல்
பாழ் - வீண், அழிவு
பீளை - கண் மலம்
பீழை - புழுங்குதல், துன்பம்
புளுகு - பொய்
புழுகு - புனுகு
பூளை - இலவம் பஞ்சு
பூழை - துவாரம், சிறுவாசல்
பொளி - கொத்து, சுத்தியாலடி
பொழி - ஊற்று, சொரி
போளி - ஒருவகையப்பம்
மழை - வான்பொழி நீர்
மாளிகை-அரண்மனை,பெருவீடு
மாளுதல் - இறத்தல்
மிளகு - கறிமிளகு
முளவு - முள்ளம் பன்றி
முழவு - மத்தளம்
முளை - தோன்று, விதைமுளை
முழை - குகை
மூளி - காதறை, விளிம்பில்லாதது
மூளை - மண்டை உள்ளீடு
மூழை - அகப்பை, துடுப்பு
மூள் - மிகு
மூழ் - அமிழ்ந்துபோதல்
மேழி - கலப்பை
மேளம் - தவுல் வாத்தியம்
வளம் - அழகு, செல்வம்
வளி - காற்று
வழி - பாதை, நிரம்பிவிழு
வளை - வட்டமாக்கு, துவாரம்
வழை - சுரபுன்னை மரம்
வாளி - அம்பு, வளையம்
வாழி - வாழ்க

வாளை - ஒரு வகை மீன்
வாழை - ஒரு மரம்
வாள் - ஒளி, ஒரு கருவி
வாழ் - உயிரோடிரு
விளா - ஒரு மரம்
விழா - திருவிழா, கொண்டாட்டம்
விளி - கூப்பிடு, இற
விழி - கண்திற, பார்
விளை - வளர், முதிர், உண்டு பண்ணு
விழை - விரும்பு
வெள்ளம் - நீர்ப்பெருக்கு
வேளம் - சிறைக்களம்
வேழம்-கரும்பு, மூங்கில், யானை
வேளை - காலம், ஒரு பூடு.

[குறிப்பு: இழிவு, இளிவு; உழறு, உளறு; உழுந்து, உளுந்து; குழறு, குளறு; சுழி, சுளி; துழாய், துளாய்; பவழம், பவளம் என்பன வேறுபாடின்றி வழங்குகின்றன.]

---

## 4. ஆண்பால், பெண்பாற் பெயர்கள்

| ஆண்பால் | பெண்பால் | ஆண்பால் | பெண்பால் |
|---|---|---|---|
| அச்சன் | அச்சி | கண்ணன் | கண்ணி |
| அண்ணன் | அண்ணி | கரியன் | கரியள் |
| அநுசன் | அநுசை | கருவூரான் | கருவூராள் |
| அப்பன் | அம்மை | கலை | பிணை |
| அமைச்சன் | அமைச்சி | களிறு | பிடி |
| அம்மான் | அத்தை | கன்ஞன் | கன்ஞத்தி |
| அரசன் | அரசி | காதலன் | காதலி |
| அலவன் | பெடை நண்டு | காந்தன் | காந்தை |
| ஆசிரியன் | ஆசிரியை | காளை | பசு |
| ஆடவன் | பெண்டு | கிழவன் | கிழவி |
| ஆதிரையான் | ஆதிரையாள் | குட்டையன் | குட்டைச்சி |
| ஆயன் | ஆய்ச்சி | குறவன் | குறத்தி |
| இடையன் | இடைச்சி | குருடன் | குருடி |
| இந்திரன் | இந்திராணி | கூனன் | கூனி |
| உபாத்தியாயன் | உபாத்தியாயி | கூகை | போத்து |
| உழவன் | உழத்தி [னி | கொழுந்தன் | கொழுந்தி |
| ஊமையன் | ஊமைச்சி | சிவம் | சத்தி |
| எம்பி | எங்கை | சிவன் | சிவை |
| எயினன் | எயிற்றி | சிறியன் | சிறியள் |
| ஒருவன் | ஒருத்தி | சிறுக்கன் | சிறுக்கி |
| ஓதுவான் | ஓதுவாள் | சிறுவன் | சிறுமி |
| கடுவன் | மந்தி | சிற்றப்பன் | சிற்றன்னை |
| கடா | கிடாரி, மறி | சீமான் | சீமாட்டி |
| கணக்கன் | கணக்கச்சி | செட்டி | செட்டிச்சி |
| கணவன் | மனைவி | செவிடன் | செவிடி |

| ஆண்பால் | பெண்பால் | ஆண்பால் | பெண்பால் |
|---|---|---|---|
| செல்வன் | செல்வி | பிராமணன் | பிராமணத்தி |
| சேங்கன்று | கிடாரி | பிரான் | பிராட்டி |
| சேவல் | பெட்டை | புதல்வன் | புதல்வி |
| சோழியன் | சோழிச்சி | புலவன் | புலத்தி |
| தச்சன் | தச்சச்சி | புலையன் | புலைச்சி |
| தட்டான் | தட்டாத்தி | பெரியன் | பெரியள் |
| தந்தை | தாய் | பெருமான் | பெருமாட்டி |
| தமையன் | தமக்கை | பேரன் | பேத்தி |
| தம்பி | தங்கை | பொன்னன் | பொன்னி |
| தனயன் | தனயை | மகன் | மகள் |
| தனவான் | தனவந்தி | மணவாளன் | மணவாட்டி |
| திருமால் | திருமகள் | மணாளன் | மணாட்டி |
| திருவாளன் | திருவாட்டி | மருமகன் | மருமகள் |
| தெலுங்கன் | தெலுங்கச்சி | மாணவன் | மாணவி |
| தேவராளன் | தேவராட்டி | மருத்துவன் | மருத்துவச்சி |
| தேவன் | தேவி | மலையாளன் | மலையாட்டி |
| தோழன் | தோழி | மாணாக்கன் | மாணாக்கி |
| நண்பன் | நண்பி | மாமன் | மாமி |
| நம்பி | நங்கை | மூடவன் | மூடத்தி |
| நல்லன் | நல்லள் | முதலியார் | முதலிச்சி |
| நான்முகன் | கலைமகள் | முதியவன் | முதியவள் |
| நொட்டையன் | நொட்டைச்சி | மூதாளன் | மூதாட்டி |
| பண்டிதன் | பண்டிதை | மூத்தான் | மூத்தாள் |
| பரவன் | பரத்தி | மைத்துனன் | மைத்துனி |
| பள்ளன் | பள்ளி, பள்ளத்[தி | வணிகன் | வணிகச்சி |
| பறையன் | பறைச்சி | வண்ணான் | வண்ணாத்தி |
| பாட்டன் | பாட்டி | வீரன் | வீரி |
| பாணன் | பாணத்தி | வலையன் | வலைச்சி |
| பார்ப்பனன் | பார்ப்பினி | வேலைக்காரன் | வேலைக்காரி |
| பார்ப்பான் | பார்ப்பாத்தி | வேளாளன் | வேளாட்டி |

---

## 5. மரபு வழுக்களும், மரபு வழாநிலைகளும்

[குறிப்பு : *அறிவுடையோர் வழங்கி வந்தபடி சொல்வது மரபு (வழக்கு) ; மாற்றிச் சொல்வது மரபு வழு.*]

| மரபு வழு | மரபு வழாநிலை |
|---|---|
| ஆட்டுப் பாகன் | ஆட்டிடையன் |
| யானை பிடையன் | யானைப் பாகன் |
| குதிரைக் கன்று | குதிரைக் குட்டி |

| மரபு வழு | மரபு வழாநிலை |
|---|---|
| பசுவின் குட்டி | பசுவின் கன்று |
| தென்னங் கன்று | தென்னம் பிள்ளை |
| வேப்பம் பிள்ளை | வேப்பங் கன்று |
| பனம்பிஞ்சு | பனங் குரும்பை |
| புளியங் குரும்பை | புளியம் பிஞ்சு |
| மா ஓலை | மா இலை |
| பனை யிலை | பனை ஓலை |
| குருவிக் குட்டி | குருவிக் குஞ்சு |
| கீரிக் குஞ்சு | கீரிப் பிள்ளை |
| நாய்க் குஞ்சு | நாய்க் குட்டி |
| மான் குட்டி | மான் கன்று |
| யானைச் சாணம் | யானை இலத்தி |
| எருமை இலத்தி | எருமைச் சாணம் |
| ஆட்டுச் சாணம் | ஆட்டுப் பிழுக்கை |
| கழுதைச் சாணம் | கழுதை விட்டை |

---

## 6. போலி

[ஒரு மொழியில் ஓர் எழுத்து நிற்குமிடத்தில் அந்த எழுத்துக்கு ஈடாக வேறோர் எழுத்து நின்றாலும் பொருள் வேறுபடாமல் ஒத்திருப்பது.]

| | | | |
|---|---|---|---|
| அறம் | அறன் | பசல் | பைசல் |
| கலம் | கலன் | மயல் | மையல் |
| நிலம் | நிலன் | அமச்சு | அமைச்சு |
| குணம் | குணன் | அரயர் | அரையர் |
| மரம் | மரன் | ஐஞ்ஞூறு | ஐந்நூறு |
| சுரும்பு | சுரும்பர் | நண்டு | ஞண்டு |
| அரும்பு | அரும்பர் | நாய் | ஞாய் |
| இடக்கு | இடக்கர் | நாண் | ஞாண் |
| வண்டு | வண்டர் | நாயிறு | ஞாயிறு |
| வெற்பு | வெற்பர் | நமன் | ஞமன் |
| பந்தல் | பந்தர் | முனி | நுனி |
| சாம்பல் | சாம்பர் | முகரிகோல் | நுகக்கோல் |
| குதில் | குதிர் | நீந்து | நீஞ்சு |
| திறம் | திறல் | ஐந்து | ஐஞ்சு, அஞ்சு |
| பக்கம் | பக்கல் | வைத்த | வைச்ச |
| கூவம் | கூவல் | நேயம் | நேசம் |
| மதில் | மதிள் | கயம் | கசம் |
| திமில் | திமிள் | ஈயல் | ஈசல் |

# 7. வல்லெழுத்துக்கள் மிகும் இடங்கள்

[வல்லெழுத்துக்கள் ஆறனுள் க, ச, த, ப ஆக நான்குமே மொழிக்கு முதலில் வருவன.]

## 'அ' இறுதிச் சொற்கள்

அ + கிளி = அக்கிளி
அந்த + காளை = அந்தக்காளை
இந்த + பசு = இந்தப்பசு
எந்த + தட்டு = எந்தத் தட்டு
அது தவிர + தேடினன் = அது தவிரத் தேடினன்
அதுபோல + கூறினன் = அது போலக் கூறினன்
பைய + சென்றான் = பையச் சென்றான்
மெல்ல + பேசினன் = மெல்லப் பேசினன்
சால + பேசினன் = சாலப் பேசினன்
மிக + சொன்னன் = மிகச் சொன்னன்
மற்ற + கரடி = மற்றக்கரடி

ஆக ; என ; விட :—

வருவதாக + கூறினன் = வருவதாகக் கூறினன்
போவதாக + சொன்னன் = போவதாகச் சொன்னன்
பாடென + கொடுத்தான் = பாடெனக் கொடுத்தான்
தேடென + சொன்னன் = தேடெனச் சொன்னன்
அவனைவிட + பெரியவன் = அவனைவிடப் பெரியவன்
அதைவிட + சிறியது = அதைவிடச் சிறியது

## 'ஆ' இறுதிச் சொற்கள்

காணு + காட்சி = காணுக் காட்சி
இல்லா + தாழ்வு = இல்லாத் தாழ்வு
பொல்லா + காலம் = பொல்லாக் காலம்
ஓடா + குதிரை = ஓடாக் குதிரை
பறவா + கிளி = பறவாக் கிளி
தேடா + பொருள் = தேடாப் பொருள்
பெய்யா + கொடுக்கும் = பெய்யாக் கொடுக்கும்
தேடா + சென்றான் = தேடாச் சென்றான்
பலா + பழம் = பலாப்பழம்
கூவா + சேவல் = கூவாச்சேவல்
புறா + கூடு = புறாக்கூடு
இரா + பள்ளிக்கூடம் = இராப் பள்ளிக்கூடம்
சுறா + துண்டம் = சுறாத் துண்டம்
கனா + கண்டான் = கனாக் கண்டான்

## 'இ' இறுதிச் சொற்கள்

இ + செடி = இச்செடி
அப்படி + செய் = அப்படிச் செய்
இப்படி + கூறினன் = இப்படிக் கூறினன்
எப்படி + போனன் = எப்படிப் போனன்
இனி + பேசு = இனிப் பேசு
தனி + குடம் = தனிக்குடம்

அன்றி, இன்றி ;

தடையின்றி + செய்தான் = தடையின்றிச் செய்தான்
மெய்யன்றி + புகழ்பெறான் = மெய்யன்றிப் புகழ்பெறான்
உப்பின்றி + தின்றான் = உப்பின்றித்தின்றான்

கட்டி + கொண்டான் = கட்டிக் கொண்டான்
தேடி + சென்றான் = தேடிச் சென்றான்
கூடி + பேசினான் = கூடிப் பேசினான்
பாதி + துணி = பாதித் துணி
உரி + காய் = உரிக்காய்
நாழி + பழம் = நாழிப்பழம்
கிளி + கூடு = கிளிக்கூடு
கூலி + தொழில் = கூலித் தொழில்
பழி + சொல் = பழிச்சொல்
மார்கழி + திங்கள் = மார்கழித் திங்கள்
பனி + காலம் = பனிக்காலம்

**'ஈ' இறுதிச்சொற்கள்**

ஈ + கால் = ஈக்கால்
தீ + குணம் = தீக்குணம்

**'உ', 'ஊ' ஈற்றுச்சொற்கள்**

உ + பக்கம் = உப்பக்கம்
அங்கு + போ = அங்குப்போ
இங்கு + செல் = இங்குச்செல்
எங்கு + கண்டாய் = எங்குக் கண்டாய்
ஆங்கு + கேட்டான் = ஆங்குக் கேட்டான்
ஈங்கு + பார்த்தான் = ஈங்குப் பார்த்தான்
யாங்கு + சென்றான் = யாங்குச் சென்றான்
ஆண்டு + சென்றான் = ஆண்டுச் சென்றான்
ஈண்டு + போர்தான் = ஈண்டுப் போர்தான்
யாண்டு + கூறினான் = யாண்டுக் கூறினான்
மற்று + சிறியன் = மற்றுச் சிறியன்

அதற்கு + கொடு = அதற்குக் கொடு
அவனுக்கு + சொல் = அவனுக் குச் சொல்
கொக்கு + கால் = கொக்குக் கால்
கற்று + கொடு = கற்றுக்கொடு
சற்று + பொறு = சற்றுப் பொறு
எட்டு + தலை = எட்டுத்தலை
பத்து + பனை = பத்துப்பனை
திரு + குளம் = திருக்குளம்
திரு + புகழ் = திருப்புகழ்
புது + கோட்டை = புதுக் கோட்டை
நடு + பகல் = நடுப்பகல்
கன்று + குட்டி = கன்றுக்குட்டி
இரும்பு + பூண் = இரும்புப்பூண்
அம்பு + தலை = அம்புத்தலை
செம்பு + தண்ணீர் = செம்புத் தண்ணீர்
அரவு + தோல் = அரவுத்தோல்;
இரவு + காலம் = இரவுக்காலம்
புறவு + தலை = புறவுத்தலை
பூ + பறி = பூப்பறி
பூ + பூத்தது = பூப்பூத்தது

**'எ', 'ஏ' இறுதிச்சொற்கள்**

எ + காலம் = எக்காலம்
ஏ + கடிது = எக்கடிது

**'ஐ' இறுதிச்சொற்கள்**

கை + களிறு = கைக்களிறு
அவ்வகை + செய்தான் = அவ் வகைச் செய்தான்
இவ்வகை + கற்றான் = இவ் வகைக் கற்றான்
எவ்வகை + திருத்தினான் = எவ்வகைத் திருத்தினான்
மற்றை + பொருள் = மற்றைப் பொருள்

அவனை + கண்டான் = அவனைக் கண்டான்
என்னை + தேடினான் = என்னைத் தேடினான்
பொருளை + பெற்றான் = பொருளைப் பெற்றான்
நல்லாரிடை + புக்கு = நல்லாரிடைப்புக்கு
மலையிடை + பிறவா = மலையிடைப் பிறவா
அரை + பணம் = அரைப்பணம்
மலை + பாம்பு = மலைப்பாம்பு
தலை + சுமை = தலைச்சுமை
கலை + கோயில் = கலைக்கோயில்
நகை + பெட்டி = நகைப்பெட்டி
சிறை + கூடம் = சிறைக்கூடம்
பறவை + கூடு = பறவைக்கூடு
யானை + கழுத்து = யானைக் கழுத்து
குதிரை + குளம்பு = குதிரைக் குளம்பு
சாரை + பாம்பு = சாரைப்பாம்பு
வாழை + பழம் = வாழைப் பழம்
பனை + கை = பனைக்கை
கோடை + காலம் = கோடைக் காலம்
மழை + காலம் = மழைக்காலம்

'ஓ' இறுதிச்சொல்

ஓ + கொடிது = ஓக்கொடிது

'மெய்' இறுதிச்சொற்கள்

அவ்விதம் + கொடுமை = அவ்விதக் கொடுமை
இவ்விதம் + பொறுமை = இவ்விதப் பொறுமை
எவ்விதம் + தீமை = எவ்விதத் தீமை
எல்லாம் + சொற்களும் = எல்லாச் சொற்களும்
எல்லாம் + படியாலும் = எல்லாப் படியாலும்
பணம் + பை = பணப்பை
கமலம் + கண் = கமலக்கண்
மரம் + கட்டில் = மரக்கட்டில்
நிலம் + பனை = நிலப்பனை
அகலம் + துணி = அகலத்துணி
வட்டம் + பலகை = வட்டப் பலகை
குளம் + கரை = குளக்கரை
படம் + காட்சி = படக்காட்சி
நாய் + தலை = நாய்த்தலை
வாய் + பேச்சு = வாய்ப்பேச்சு
போய் + சொல் = போய்ச்சொல்
தயிர் + குடம் = தயிர்க்குடம்
பயிர் + தொழில் = பயிர்த் தொழில்
மயிர் + கம்பளம் = மயிர்க் கம்பளம்
நார் + கட்டில் = நார்க்கட்டில்
நகர் + புறம் = நகர்ப்புறம்
மலர் + சோலை = மலர்ச்சோலை
நீர் + பாம்பு = நீர்ப்பாம்பு
வாழ் + பயன் = வாழ்ப்பயன்
கீழ் + குலம் = கீழ்க்குலம்
கீழ் + காற்று = கீழ்க்காற்று
(கீழ்குலம், கீழ்காற்று என மிகாமலும் வரும்.)

# 8. வல்லெழுத்துக்கள் மிகா இடங்கள்

**'அ', 'ஆ' இறுதிச் சொற்கள்**

சில + செல்வம் = சில செல்வம்
பல + குதிரை = பல குதிரை
நல்ல + பாம்பு = நல்ல பாம்பு
கெட்ட + பையன் = கெட்ட பையன்
வந்த + காலம் = வந்த காலம்
பேசின + பேச்சு = பேசின பேச்சு
எழுதின + புத்தகம் = எழுதின புத்தகம்
பாடுகிற + பாட்டு = பாடுகிற பாட்டு
வருகிற + காலம் = வருகிற காலம்
அண்ணா + கொடு = அண்ணா கொடு
அவனா + செய்தான் = அவனா செய்தான்
வாழ்க + கொற்றம் = வாழ்க கொற்றம்
சென்ற + பூனை = சென்ற பூனை
கரிய + பூனை = கரிய பூனை

**'இ', 'ஈ' இறுதிச் சொற்கள்**

வரும்படி + கூறினான் = வரும்படி கூறினான்
போகும்படி + சொன்னான் = போகும்படி சொன்னான்
(அப்படி, இப்படி, எப்படி என்ற சொற்கட்குப் பின் மட்டும் மிகும்.)
புலி + பாய்ந்தது = புலிபாய்ந்தது
புலி + பிடித்தான் = புலி பிடித்தான்
புளி + தின்றான் = புளி தின்றான்
வழி + தேடினான் = வழி தேடினான்
பொன்னி + கணவன் = பொன்னி கணவன்
தம்பீ + போ = தம்பீ போ

**'உ', 'ஊ' இறுதிச் சொற்கள்**

அது + நெடிது = அது நெடிது
அது + பெரிது = அது பெரிது
இது + கொடிது = இது கொடிது
எது + சிறிது = எது சிறிது
எது + பெரிது = எது பெரிது
அடு + களிறு = அடு களிறு
சுடு + சோறு = சுடு சோறு
ஓடு + குதிரை = ஓடு குதிரை
காது + கேளாது = காது கேளாது
மாடு + சீறுது = மாடு சீறுது
உலகு + பெரிது = உலகு பெரிது
வரகு + சிறிது = வரகு சிறிது
செய்து + கொண்டான் = செய்து கொண்டான்
பெய்து + பார்த்தான் = பெய்து பார்த்தான்
அறிந்து + கொண்டான் = அறிந்து கொண்டான்
தெரிந்து + போனான் = தெரிந்து போனான்
வந்து + சொன்னான் = வந்து சொன்னான்
பங்கு + பிரித்தான் = பங்கு பிரித்தான்
பந்து + பெரிது = பந்து பெரிது
அம்பு + தொடு = அம்பு தொடு
கண்டு + சொல் = கண்டு சொல்
இரவு + கழிந்தது = இரவு கழிந்தது
உறவு + போனது = உறவு போனது

பசியுள்ளவன் ருசி யறியான்
பசி வந்திடில் பத்தும் பறந்துபோம்
பசுவிலும் ஏழை இல்லை, பார்ப்பாரிலும் ஏழையில்லை
பச்சைமண்ணும் சுட்டமண்ணும் ஒட்டுமா?
பஞ்சும் நெருப்பும் ஒன்ருய்க் கிடக்குமா? எகூரு
படிக்கிறது திருவாய்மொழி, இடிக்கிறது பெருமாள் கோயில்
படைக்கும் ஒருவன் கொடைக்கும் ஒருவன்
படையிருந்தால் அரணில்லை
படை முகத்திலும் அறிமுகம் வேண்டும்
பட்ட காலிலே படும், கெட்டகுடியே கெடும் எசுo
பட்டா உன் பேரில் சாகுபடி என்பேரில்
பட்டுக்கோட்டைக்கு வழி கேட்டால், கொட்டைப் பாக்குக்கு விலை சொல்லுகின்ருய்
பட்டும் பட்டாடையும் பெட்டியிலிருக்கும், காற்காசு கந்தை ஓடி உலாவும்
பணக்காரன் பின்னும் பத்துப்பேர், பைத்தியக்காரன் பின்னும் பத்துப்பேர்
பணத்தைப் பார்க்கிறதா பழைமையைப் பார்க்கிறதா? எசுரு
பணம் உண்டானல் மணம் உண்டு
பணம் என்ன செய்யும் பத்தும் செய்யும்
பணம் பந்தியிலே குலம் குப்பையிலே
பண்ணப் பண்ணப் பலவிதம் ஆகும்
பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும் எஎo
பதருத காரியம் சிதருது
பந்திக்கில்லாத வாழைக்காய் பந்தலிலே கட்டித்தொங்குகிறதாம்
பத்துப்பேருக்குப் பல்குச்சி ஒருவனுக்குத் தலைச்சுமை
பரணியிலே பிறந்தால் தரணி ஆளலாம்
பருத்திக்கு உழும் முன்னே தம்பிக்கு எட்டு முழம் எஎரு
பலநாளைத் திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான்
பல மரம் கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டமாட்டான்
பல்லக்கு ஏற யோகம் உண்டு, உன்னி ஏறச் சீவன் இல்லை
பல்லுப் போனல் சொல்லுப் போச்சு
பழகப் பழகப் பாலும் புளிக்கும்
பழம் புண்ணுளி பாதி பரிகாரி எஅo
பழி ஒரு பக்கம் பாவம் ஒரு பக்கம்
பழுத்த ஓலையைப் பார்த்துக் குருத்தோலை சிரிக்கிறதாம்
பழுத்த பழம் கொம்பிலே நிற்குமா?
பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது எஅரு
பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா?
பனி பெய்தால் மழை இல்லை, பழம் இருந்தால் பூ இல்லை

பனை நிழலும் நிழலோ, பகைவர் உறவும் உறவோ?
பனை மரத்தின்கீழே பாலைக் குடித்தாலும் கள் என்று நினைப்பர்
பன்றிக்குப் பின் போகிற கன்றும் பீ தின்னும் எசுo
பன்றி பல குட்டி சிங்கம் ஒரு குட்டி

பா

பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்
பாடில்லாமற் பயனில்லை
பாம்பு என்றால் படையும் நடுங்கும்
பாம்புக்குப் பால்வார்த்து வளர்த்தாலும் விடத்தையே கொடுக்கும்
பாம்பை முட்டையிலே புலியைக் குட்டியிலே கொல்லவேண்டும்
பாராத உடைமை பாழ்
பார்த்தால் பூனை பாய்ந்தால் புலி
பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்
பாலைப் பார்த்துப் பசுவைக் கொள்ளு அoo
பானையில் உண்டானால் அகப்பையில் வரும்

பி

பிள்ளை அருமை பெற்றவளுக்குத் தெரியும்
பிள்ளை பெற்றபின் அன்றோ பேரிடவேண்டும்
பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது

பு

புத்திகெட்ட இராசாவுக்கு மதிகெட்ட மந்திரி அருரு
புத்திமான் பலவான்
புருவத்திற் பட்டால் கரிக்குமோ கண்ணிற்பட்டால் கரிக்குமோ?
புலிக்குப் பிறந்தது பூனையாய்ப் போகுமா?
புலி பதுங்குவது பாய்ச்சலுக்கு அடையாளம்
புழுங்கிப் புழுங்கி மாஇடித்தாலும் புழுக்கைச்சிக்கு ஒரு கொழுக்
கட்டைதானே அகo
புழைக்கடை மருந்து கவைக்காகாது

பூ

பூ மலர்ந்து கெட்டது வாய் விரிந்து கெட்டது
பூமியைப்போலப் பொறுமை வேண்டும்
பூவரசிருக்கப் பொன்னுக் கழுவானேன்?
பூவிற்ற காசு மணக்குமா? புலால் விற்ற காசு நாறுமா? அகரு
பூனைக்குக் கொண்டாட்டம், எலிக்குத் திண்டாட்டம்

பெ

பெட்டைக் கோழி தட்டிக் கூவுமா?
பெண் என்றால் பேயும் இரங்கும்
பெண்கள் இருந்த இடம் சண்டைகள் பெருத்திடும்

பெண்டு வாய்க்கும் புண்ணியவானுக்கு, பண்டம் வாய்க்கும் பாக்கியவானுக்கு
பெண்ணின் கோணல் பொன்னிலே நிமிரும்
பெண்ணென்று பிறந்தபோதே புருடன் பிறந்திருப்பான்
பெண் வளர்த்தி பீர்க்கங் கொடி
பெய்தும் கெடுத்துக் காய்ந்தும் கெடுத்தது
பெருமாள் இருக்கிற வரையில் திருநாள் உண்டு
பெருமையும் சிறுமையும் வாயால் வரும்
பெற்ற தாய் பசித்திருக்கப் பிராமண போசனம் செய்கிறானாம்
பெற்ற மனம் பித்து பிள்ளை மனம் கல்லு

### பே

பேசப் பேச எந்த மொழியும் வரும்
பேசாதிருந்தால் பிழையொன்றுமில்லை
பேராசை பெருநட்டம்
பேர் இல்லாச் சந்நிதி பாழ், பிள்ளை இல்லாச் செல்வம் பாழ்

### பை

பை எடுத்தவனெல்லாம் வைத்தியனா?

### பொ

பொங்கும் காலம் புளி, மங்கும் காலம் மாங்காய்
பொய் சொல்லி வாழ்ந்தவனும் இல்லை, மெய் சொல்லிக் கெட்டவனும் இல்லை ௮௩௯
பொய் சொன்ன வாய்க்குப் போசனங் கிடையாது
பொறி வென்றவனே அறிவின் குருவாம்
பொறுத்தார் பூமி ஆள்வார் பொங்கினார் காடாள்வார்
பொறுமை கடலினும் பெரிது
பொற்கலம் ஒலிக்காது, வெண்கலம் ஒலிக்கும் ௮௪௦
பொன் ஆபரணத்தைப் பார்க்கிலும் புகழ் ஆபரணமே பெரிது
பொன் கத்தி என்று கழுத்தை அறுத்துக் கொள்ளலாமா?
பொன் குடத்துக்குப் பொட்டிட வேண்டுமா?
பொன்னாங்கண்ணிக்குப் புளியிட்டு ஆக்கினால் உண்ணாப் பெண்ணும் ஓர் உழக்கு உண்ணும்

### போ

போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து
போரோடு தின்கிற மாட்டுக்குப் பிடுங்கிப் போட்டுக் கட்டுமா?
போனதை நினைக்கிறவன் புத்தி கெட்டவன்

### ம

மகன் செத்தாலும் சாகட்டும், மருமகள் கொட்டம் அடங்கினால் போதும்
மடியிலே கனம் இருந்தால் வழியிலே பயம்

மட்டான போசனம் மனத்திற்கு மகிழ்ச்சி அ௫0
மண்குதிரையை நம்பி ஆற்றில் இறங்கலாமா ?
மண்டை உள்ள வரையில் சளி போகாது
மதியாதார் வாசலை மிதியாதிருப்பதே உத்தமம்
மந்திரிக்கும் உண்டு மதிக்கேடு
மயிர் ஊடாடாத நட்பும் பொருள் ஊடாடக் கெடும் அ௫௫
மரம் வெட்டுகிறவனுக்கு நிழலும், மண் தோண்டுகிறவனுக்கு இடமும் கொடுக்கும்
மரம் வைத்தவன் தண்ணீர் வார்க்க மாட்டானா ?
மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்
மருந்தும் விருந்தும் மூன்று வேளை
மருந்தே யாயினும் விருந்தோ டுண்ணு அ௬0
மலடிக்குத் தெரியுமா பிள்ளையின் வருத்தம்
மலிந்த சரக்கு கடைத்தெருவுக்கு வரும்
மலையைத் துளைக்கச் சிற்றுளி போதாதா ?
மல்லாந்து உமிழ்ந்தால் மார்மேலே விழும்
மவுனம் கலக நாசம் அ௬௫
மழைமுகம் காணாத பயிரும் தாய்முகம் காணாத பிள்ளையும் [மா?
மழை விட்டும் தூவானம் விடவில்லை
மனத்திலிருக்கும் இரகசியம் மதிகேடனுக்கு வாக்கிலே
மனப்பொருத்தம் இருந்தால் மற்றப்பொருத்தம்பார்க்க வேண்டு
மனமுரண்டிற்கு மருந்துண்டா? அ௭0
மனம் உண்டானால் இடம் உண்டு
மனம் தடுமாறினால் மாற்றானுக்கு வலிமை
மனம் போல வாழ்வு
மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி
மன்னுயிரைத் தன்னுயிர்போல் நினை

மா

மாடம் இடிந்தால் கூடம்
மாடு கிழமானாலும் பாலின் சுவை போகுமா ?
மாடு கெட்டால் தேடலாம், மனிதர் கெட்டால் தேடலாமா ?
மாடு நினைத்த இடத்தில் தொழுவம் கட்டுவார்களா ?
மாடு மேய்க்காமற் கெட்டது, பயிர் பார்க்காமற் கெட்டது அ௮0
மாதா ஊட்டாத சோறு மாங்காய் ஊட்டும்
மாதா மனம் எரிய வாழான் ஒருநாளும்
மா பழுத்தால் கிளிக்காம், வேம்பு பழுத்தால் காக்கைக்காம்
மாமியாரும் ஒரு வீட்டு மாட்டுப் பெண்தான்
மாமியாருடைத்தால் மண்கலம் மருமகளுடைத்தால் பொன்குடம்
மாமியார் மெச்சின மருமகளில்லை. மருமகள் மெச்சின மாமியா [ரில்லை
மாரடித்த கூலி மடிமேலே

மாரிக்காலத்தில் பதின்கல மோரும் கோடைக்காலத்தில் ஒருபடி நீருஞ் சரி
மாரி யல்லது காரியம் இல்லை
மாலை சுற்றிப் பிறந்த பிள்ளை மாமனுக்கு ஆகாது
மாவுக்குத் தக்க பணியாரம் ௮௯௦
மாற்றானுக்கு இடங்கொடேல்
மானம் அழிந்தபின் மரியாதை என்ன ?
மானம் பெரிதோ? உயிர் பெரிதோ?
மானைக் காட்டி மானைப் பிடிப்பார்

மி

மிஞ்சியது கொண்டு மேற்கே போகுதல் ஆகாது ௮௯௫
மிதித்தாரைக் கடியாத பாம்பு உண்டா ?
மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை

மீ

மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது
மீதூண் விரும்பேல்

மு

முகத்துக்கு முகம் கண்ணாடி ௯௦௦
முக்காலும் காகம் முழுகிக் குளித்தாலும் கொக்காகுமா ?
முட்டாள் தனத்துக்கு முதல் பாக்குக்காரன்
முட்டையிடுகிற கோழிக்கு வருத்தம் தெரியும்
முதலியார் டம்பம் விளக்கெண்ணெய்க்குக் கேடு
முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா ௯௦௫
முதற் கோணல் முற்றுங் கோணல்
முதுகிலே புண் உண்டானால் செடியிலே நுழையப் பயம் [படார்
முத்தால் நத்தைப் பெருமைப்படும், மூடர் எத்தாலும் பெருமைப்
முப்பது வருடம் வாழ்ந்தவனும் இல்லை, முப்பது வருடம் தாழ்ந்தவனும் இல்லை
முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார் ௯௧௦
முருங்கை பருத்துத் தூணாகப் போகிறதா ?
முள்ளுமேல் சீலைபோட்டால் மெள்ள மெள்ள வாங்கவேண்டும்
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்
முற்றும் நனைந்தவர்களுக்கு ஈரம் ஏது ?
முன் ஏர் போன வழி பின்ஏர் ௯௧௫
முன்கை நீண்டால் முழங்கை நீளும்
முன்வைத்த காலைப் பின் வைக்கமாட்டேன்
முன்னவனே முன்நின்றால் முடியாத பொருள் உளதோ ?

மூ

மூடர் கூட்டுறவு முழுதும் அபாயம்
மூத்தோர் சொல் வார்த்தை அமுதம் ௯௨௦

**மெ**

மெய்சொல்லிக் கெட்டவனுமில்லை பொய்சொல்லி வாழ்ந்தவனு [மில்லை
மெல்லப் பாயும் தண்ணீர் கல்லையும் குழியப் பாயும்

**மே**

மேருவைச் சார்ந்த காகமும் பொன்னிறம்
மேற்கே மழை பெய்தால் கிழக்கே வெள்ளம் வரும்

**மொ**

மொட்டைத் தலையன் போருக்கு அஞ்சான் ௬௨௫
மொழி தப்பினவன் வழி தப்பினவன்

**மோ**

மோகம் முப்பதுநாள், ஆசை அறுபது நாள்

**மௌ**

மௌனம் மலையைச் சாதிக்கும்

**யா**

யானை மிதிக்கப் பிழைப்பார்களா ?

**வ**

வஞ்சகம் வாழ்வைக் கெடுக்கும் ௬௩0
வடக்குப் பார்த்த மச்சு வீட்டைப் பார்க்கிலும் தெற்குப் பார்த்த குச்சுவீடு நல்லது
வடக்கே கருத்தால் மழை வரும்
வட்டி ஆசை முதலுக்குக் கேடு
வணங்கின முள் பிழைக்கும்
வரவுக்குத் தக்கபடி செலவை வரையறு ௬௩௫
வருந்தினல் வாராதது இல்லை
வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்
வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு
வளவனுயினும் அளவறிந் தளித்துண்
வழுவழுத்த உறவைப் பார்க்கிலும் வைரம் பற்றிய பகை நன்று

**வா**

வாங்குகிறதைப் போலிருக்கவேண்டும் கொடுக்கிறதும்
வாயுள்ள பிள்ளை பிழைக்கும்
வாய் சர்க்கரை கை கருணைக்கிழங்கு
வாய் மதத்தால் வாழ்வை இழந்தான்
வாழ்கிறதும் கெடுகிறதும் வாயினுல்தான் ௬௪௫
வாழ்வும் சிலகாலம் தாழ்வும் சிலகாலம்

**வி**

விடாச்சுரத்துக்கு விட்டுணுகரந்தை
விண் பொய்த்தால் மண் பொய்க்கும்
விதி எப்படியோ மதி அப்படி

வியாதிக்கு மருந்துண்டு விதிக்கு மருந்துண்டா ? ௬௫௦
விருப்பத்தினால் ஆகாதது வீம்பினால் ஆகுமா ?
விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா ?
வில்வப்பழம்தின்பார் பித்தம்போக, பனம்பழம்தின்பார் பசிபோக
விளக்கு மாற்றுக்குப் பட்டுக்குஞ்சமா ?
விளையாட்டாய் இருந்தது வினையாய் முடிந்தது ௬௫௫
விளையும் பயிர் முளையிலே தெரியும்
வினை விதைத்தவன் வினை அறுப்பான், தினை விதைத்தவன் தினை அறுப்பான்

## வீ

வீடு அசையாமல் தின்னும் யானை அசைந்து தின்னும்
வீட்டுச் செல்வம் மாடு, தோட்டச் செல்வம் முருங்கை
வீட்டைக் கட்டு அல்லது காட்டை அழி ௬௬௦

## வெ

வெட்டு ஒன்று கண்டம் (துண்டு) இரண்டு
வெள்ளம் வருகிறதுக்கு முன்னே அணை போட வேண்டும்
வெள்ளாளன் கிரந்தமும் பார்ப்பான் தமிழும் வழவழ
வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை

## வே

வேகாத சோற்றுக்கு விருந்தாளி இரண்டுபேர் ௬௬௫
வேடிக்கைக்கு விலை இல்லை கதைக்குக் காலில்லை
வேண்டாப் பெண்டாட்டி கைபட்டாற் குற்றம் கால்பட்டாற் குற்றம்
வேண்டும் என்று நூற்றால் வெண்ணெய் போல நூற்கலாம்
வேலிக்குப் போட்ட முள் காலுக்கு வினையாயிற்று
வேலி தானே பயிரை மேய்ந்தால் விளைவது எப்படி? ௬௭௦
வேலைக் கள்ளிக்குப் பிள்ளைமேல் சாக்கு
வேலைக்கோ சம்பளம் ஆளுக்கோ சம்பளம்
வேலை செய்யாத பிள்ளையைக் கையில்லை, வேலைசெய்கிற பிள்ளையைக் காலில்லை

## வை

வைகறைத் துயிலெழு
வைத்தியன் பேச்சு நாலில் ஒரு பங்கு ௬௭௫
வைத்தியன் மருந்திலும் கைமருந்தே நலம்
வைவார்க்கு இன்பம் இல்லை, பொறுத்தார்க்குத் துன்பம் இல்லை

## வௌ

வௌவால் தின்னாத பழம் இல்லை
வௌவி வௌவிச் சேர்த்தாலும் மற்றவர்க்கு வைத்து ஒழிவான்

வெளியீடு—அ

ஓம்

# உவமை யகரவரிசை



இடம்நோக்கி உவமை
அமைத்துப் பொருள் சிறக்கப்
பேசவும் எழுதவும் கற்பிப்பது



தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்
சென்னை
1978

முதற் பதிப்பு: பிப்ரவரி 1939
மறுபதிப்புக்கள்: சூன் 1948; திசம்பர் 1952; ஆகஸ்ட் 1959;
சூலை 1962; திசம்பர் 1974; மார்ச்சு 1978

# முன்னுரை

நம் பழந்தமிழ் நூல்களிலும், பிற்காலப் புலவர் பெருமக்கள் எழுதிய உரைநடை நூல்களிலும், பேச்சு வழக்கிலும் ஆயிரக்கணக்கான உவமைகள் வழங்கப் பெறுகின்றன. அவற்றுள் மிகுபயனுடையவும், எளிய நடையினவுமான உவமைகளில் ஏன்னூறுக்கு மேற்பட்டவற்றை மட்டும் ஆராய்ந்து எடுத்து அகரவரிசைப் படுத்தி இதன்கண் வெளியிட்டிருக்கின்றோம்.

பொருள் நயம் பொலிந்து விளங்குமாறு உரைநடை எழுத விரும்புவார்க்கும், கேட்டார்ப் பிணிக்கும் வகையில் பேச விழைவார்க்கும் இவ்வுவமைகள் பழமொழிகள் போலப் பெருந்துணை புரிவனவாம். இவ் வுவமைகளிலும் பல பழமொழிகளாக வழங்குகின்றன என்பது அறிதற்பாலது.

இந்நூல் சிறப்பாகக் கல்லூரி மாணாக்கர்கட்கும், பொதுவாகத் தமிழ்மக்களனைவர்க்கும் பயன்படுவதொன்றாகும். இக் கழகத்தார் வெளியிட்டுள்ள ஏனைய நூல்களைப்போல மிகவும் எளிய விலைக்குக் கிடைக்கப்பெறும் இந் நூற்படிகளைப் பள்ளிக்கூட ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களை வாங்குமாறு தூண்டியும், தமிழ்ச் செல்வர்கள் நூற்றுக்கணக்காக வாங்கித் தமிழ் மக்கட்கு விலையின்றி வழங்கியும் எம் தமிழ்த் தொண்டைச் சிறக்கச் செய்யுமாறு அவர்களைப் பெரிதும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தார்.

ஓம்

# உவமை யகர வரிசை

---

அகலா தணுகாது தீக்காய்வார் போல
அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல
அங்கணத்து ளுக்க அமிழ்தம்போல்
அச்சில்லாத தேர் போல
அடிபட்ட பந்துபோல

அடிமரம் போல்
அடியற்ற மரம்போல்
அடியிலிருந்து கரும்பு தின்பது போல
அடியும் நுனியும் தறித்த கட்டைபோல
அடிவயிற்றில் இடி விழுந்ததுபோல்

அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு போவதுபோல்
அடுங்காலை நீர் கொண்ட வெப்பம்போல
அடுத்தது காட்டும் பளிங்குபோல
அடை காத்த கோழிபோல
அணை கடந்த வெள்ளம்போல்

அதிகாரி வீட்டில் திருடித் தலையாரி வீட்டில் வைத்தது போல
அத்தி பூத்தாற் போல
அநுமார் இலங்கையில் சீதையைத் தேடினதுபோல்
அந்தி அங்காடிக் கடைபோல
அந்திக் காலத்துத் தாமரை போல்

அம்பட்டன் குப்பையைக் கிளறுவது போல
அம்பு செய்து கொடுத்த கருமானை நோவதுபோல
அம்பேறுண்ட மயில் போல
அம்மி துணையாக ஆறு இறங்கியது போல
அரங்கின்றி வட்டாடியது போல

அரம் பொருத பொன்போல
அரிசி அள்ளுகிற காகம் போல
அருஞ்சுரத்தின் மரம்போல
அரைக் கிணறு தாண்டியவனைப் போல்
அரைப் படிப்பைக் கொண்டு அம்பலம் ஏறுவதுபோல

அரைப் பணங் கொடுத்து அழச்சொல்லி, ஒரு பணங் கொடுத்து ஓயச் சொன்னது போல
அலைபுனலுள் நிற்பினும் தாமரை ஈன்ற இலையின்கண் நீர் நில்லாதது போல்
அல்லித் தண்டு போல
அவசரக் கோலம் அள்ளித் தெளித்தது போல
அழகிய நீலப்படாத்தின் விரிவில் நித்திலந் தூவினா லென 35

அழகுக் கழகு செய்வது போல
அழகுள்ள மங்கைக்கு அணிந்த அணிகலன்போல்
அழகெலாந் திரண்ட பசும்பொற் பாவை போல
அழலருகே சேர்ந்த மலர் போல
அழன்மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கெல்லாம் நிழல்மரம் போல 40

அழுகுரலோசை கேட்ட அந்தணர் போல
அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் [போல
அளிந்த புண்ணில் அம்புபட்டது போல்
அறத்தாற்றின் வழங்காதான் ஆக்கம்போல்
அறிதோறும் அறியாமை கண்டற்று 45

அறுகயி றூசல் போல
அறுத்த கோழி துடிக்குமாப் போல
அற்ற குளத்து அறுநீர்ப் பறவை போல்
அற்ற குளத்துக் கொட்டியும் ஆம்பலும் போல
அன்றிலும் பேடும் போல 50

அன்ன நடை நடக்கப்போய்த் தன் நடையும் இழந்தாற்போல்
ஆகாயத்திற் கட்டிய கோட்டை போல
ஆடி ஓய்ந்த பம்பரம் போல்
ஆடிக் காற்றில் உதிரும் சருகுபோல
ஆடு குழை தின்றாற் போல 55

ஆடுங் கறங்குந் திரிகையும் போல்
ஆடும் பெண்டிர் அணியே போல்
ஆடு பிடிக்கப் போய்க் கரடி அகப்பட்டது போல்
ஆண்டிகள் கூடி மடங்கட்டினது போல்
ஆந்தை விழிக்கிறது போல 60

ஆப்பதனைப் பிடுங்கிவிட்ட பேய்க்குரங்கு போல
ஆமை திடரில் ஏறினாற் போல
ஆயிரம் பாட்டிற்கு அடிதெரியும் என்றாற் போல
ஆயிரம் பாம்பினுள் ஒரு தேரை அகப்பட்டாற் போல
ஆயும் மலர்த்தேன் வண்டருந்துவது போல் 65

ஆலம் வித்துப் போல
ஆல விழுது தாங்கி நிற்பது போல
ஆலையில் அகப்பட்ட கரும்பு போல
ஆழ்ந்த கடலுக்குள் புதைந்து கிடக்கும் முத்தைப்போல்
ஆழ்ந்தகுளம் தன் ஆழத்தைக் காட்டாமல் அமைதியாயிருப்பது
போல 70

ஆவிற்கு இரு கோடுபோல
ஆவேறு உருவின தாயினும் ஆபயந்த பால்வேறு
உருவினவல்லா ததுபோல்
ஆள வந்தவனை அடிமை செய்தது போல்
ஆளைப்பார்த்தால் அழகுபோல வேலையைப்பார்த்தால் இழவுபோல
ஆறிடுமேடும் மடுவும்போல். 75

ஆற்றங் கரையின் மரம்போல்
ஆற்றில் கரைத்த புளிபோல்
ஆற்றில் பறிகொடுத்துக் குளத்தினில் தேடியதைப் போல
ஆற்றைத் தாண்ட முடியாதவன் ஆழியைத் தாண்ட முயன்ற
வாறு போல 80

ஆனைக் கூட்டத்திற் சிங்கம் புகுந்ததுபோல
ஆனை தன் கோட்டிடை வைத்த கவளம் போல்
ஆனை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொண்டது
போல
ஆனையும் ஆனையும் மோதும்போது இடையிலகப்பட்ட கொசுகு
போல
ஆனை வாயிலே போன கரும்பு போல
ஆன்படு நெய் பெய் கலனுள் அது களைந்து
வேம்படு நெய் பெய் தனைத்து 85

இடந்தெரியா திருந்த புதையல் எதிர்வரப் பெற்றவர் போல
இஞ்சி தின்ற குரங்கு போல
இடாது பலன் தேடுங் கிராதர் போல
இடிஇடித்து மழை ஓய்ந்தது போல
இடிகரை வாழ் மரம் போல் 90

இடித்த புளிபோல
இடியோசை கேட்ட பாம்பு போல்
இடி விழுந்த மரம் போல
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா கொடிப்
புற் கறிக்காதது போல்
இணை பிரிந்த அன்றில் போல 95

இரண்டு கண்ணு மில்லாதவனை நல்லகண்ணன் என்பது போல்
இரண்டோடத்திற் கால் வைத்தவனைப் போல
இரவும் பகலும் மாறிமாறி வருவது போல்
இருதலைக் கொள்ளியினுள் எறும்பு போல
இருதலைப் புள்ளின் ஓருயிர் போல் 100

இருநாய்க் கிட்ட எலும்பு போல
இருப்புக் கோட்டையும் கற்கதவும் போல
இரும்புங் காந்தமும் பொருந்துந் தன்மை போல்
இரும்புத் தூணை எறும்பு அரித்தாற் போல
இலவு காத்த கிளி போல 105

இலை நலவாயினும் எட்டிபழுத்தாற் குலைநலவாங்கனி கொண்டுணலாகாதது போல்
இலைமறை காய் போல
இழந்த பொருள் எதிர்வரப் பெற்றவர்போல
இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதே போல்
இழித்தவை காமுறும் ஈப்போல 110

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் போல்
இழுமெனும் ஓசையி னெழுகுறும் அருவிபோல்
இள ஞாயிறு போல்
இளந்திங்களின் வளர் நிலவு போல
இனம இனத்தை நாடுமாப் போல 115

இனம் பிரிந்த மான் போல
இன்சுவைத் தேனை ஈக்கள் சுற்றுவது போல
ஈங்கையிட்டு வரகுழுவார் போல
ஈன்றோள் நீத்த குழவி போல்
உடலும் நிழலும் போல 120

உடுக்கை இழந்தவன் கை போல
உடும்புப் பிடி போல
உடைந்துழிக் காகம் போல்
உடையவன் பாரா வேலை போல்
உட்சுவரிருக்கப் புறச்சுவர் பூசுவார் போல 125

உண்டில்லை யென்னுங் குமிழியைப் போல
உண்ணுதற்குத் தகுதியில்லாத வாவியில் நீர் நிரம்பியிருத்தல் [போல
உப்பிருந்த பாண்டம் போல
உப்பொடு நெய் பால் தயிர் காயம் பெய்தடினும் கைப்பறுப் பேய்ச்சுரையின் காய்போல்
உமியைக் குத்திக் கை சலித்தாற் போல 130

உயிரும் உடலும் போல
உயிரைப் பிரிந்த உடம்பு போல
உரிய காலத்திற் பெய்த மழை போல்
உருத்திராக்கப் பூனை உபதேசம் பண்ணினது போல
உருள்பெருந் தேருக்கு அச்சாணி போல 135

உலக்கைக் கொழுந்து போல
உலைப்படு மெழுகு போல
உலைப்பெய்து அடுவது போல
உழுகிற நாளில் ஊருக்குப் போய், அறுக்கிற நாளில் அரிவாள்
கொண்டு வந்தாற் போல
உழுந்துக் குவியலுட் புகுந்த மையுருண்டை போல 140

உழுந்துருள் நேரம் போல்
உள்ளங்கை நெல்லிக்கனி போல
உள்ளீ டில்லாப் பதர் போல
உள்ளீ டில்லாப் புழலையான மூங்கிற்கோல் போல
உறங்கி விழிப்பது போல 145

உறுபுனல் தந்துல கூட்டி அறுமிடத்தும்
கல்லூற்றுழியூறும் ஆறே போல்
உறை மோருக்கு இடமில்லாத வீட்டில் விலை மோருக்குப்
போனாற் போல
உனக்கு உட்பட்டுப் பின்பாட்டுப் பாடுகிற மனிதர் போல
ஊசல் கயிறு அற்றாற் போல
ஊசியும் சரடும் போல் 150

ஊத்தைப் பல்லுக்கு விளாங்காய் சேர்ந்தாற் போல்
ஊனொடுங்க வீறொடுங்குமாறு போல
ஊமையும் ஊமையும் மூக்கைச் சொறிந்தாற் போல
ஊமைகண்ட கனாப் போல
ஊமை செய்யும் பிரசங்கத்தைச் செவிடன் கேட்டது போல் 155

ஊரங்கண நீர் உரவுநீர் சேர்ந்தக்கால் பேரும்
பிறிதாகித் தீர்த்தமாதல் போல்
ஊருணி நீர் நிறைந்தாற் போல
ஊர் கூடிச் செக்குத் தள்ளினாற் போல
ஊர்க்கடனும் உள்ளங்கைச் சிரங்கும் போல
எச்சிலைக்கு நாய் அடித்துக்கொண்டு நிற்கிறது போல் 160

எச்சிலைத் தின்று ஏப்பம் இட்டாற் போல
எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விட்டது போல
எட்டி பழுத்தாற் போல்

எட்பகவு போல்
எண்ணெய்க் குடத்தைச் சுற்றும் எறும்பு போல் 165

எந்நிலத்து வித்திடினும் காஞ்சிரங்காய்
தெங்காகாதது போல்
எமன் கையிலகப்பட்ட உயிர் போல
எமன் கையிலிருந்து மீண்டது போல
எரிமண்டிக் கானந் தலைப்பட்ட தீப்போல்
எரிமுன்னர் வைத் தூறு போல் 170

எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளினது போல்
எரிகின்ற புண்ணில் ஈட்டிவைத்தாற் போல
எரிப்படு பஞ்சு போல்
எருது கோபங்கொண்டு பரதேசம் போனது போல்
எருமை மாட்டின்மேல் மழை பெய்தது போல் 175

எலிக்குப் பயந்து வீட்டுக்குத் தீ வைத்ததுபோல்
எலிபிடித் தலைக்கும் சிறு பூனை போல
எலியும் பூனையும் போல்
எலுமிச்சங்காய்க்குப் புளிப்பு ஏற்றுகிறது போல்
எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி இருப்பதுபோல் 180

எழுதுங்கால் கோல்காணுக் கண்ணே போல
எழுத்தறியாதவன் ஏட்டைச் சுமந்தது போல
எள்ளாட்டியவழி யல்லாது எண்ணெய் புலப்படாதவாறு போல
எள்ளுக்காய் பிளந்தாற் போல
எள்ளுக்குள் எண்ணெய் போல 185

எள்ளும் பச்சை யரிசியும் போல்
எறும்புப் புற்றில் பாம்பு குடி கொள்வதுபோல்
ஏகாதசிக்கு மாஇடித்தாற் போல
ஏணி கோணி நாரத்தங்காய் போல்
ஏதிலார் குற்றம் போல் 190

ஏமநிழல் இட்டு மலர் காய் கனிகள் ஈத்துதவும்
நல்மரத்தைக் கட்டும் உடைமுள் போல்
ஏறவிட்டு ஏணியை வாங்கினது போல
ஏருமடைக்கு நீர் பாய்ச்சுகிறது போல
ஐயம் புகும் தவசி கடிஞை போல்
ஒட்டைக்குப் பளுவு ஏற்றுகிறது போல் 195

ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியை விரட்டியது போல
ஒரு அச்சிலே உருக்கி வார்த்தாற் போல

ஒரு சிறு மயிரிழக்கினும் மாயுங் கவரிமாப்போல
ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போல
ஒரு நாய் குரைப்பதைக் கண்டு தெருநாய்களெல்லாம் சேர்ந்து குரைப்பது போல் 200

ஒரு நாள் கூத்துக்கு மீசையைச் சிரைத்தாற் போல்
ஒருமைப் பாடில்லாத குடிபோல
ஒல்லை இடுநீற்றால் பையவிந்த நாகம் போல்
ஒவ்வாக காலத்து உயர்மரம் பழுத்த துவ்வாக் கனிபோல்
ஒளிமிளிர் கற்களைப் பைம்பொனிற் பதித்தாற் போல 205

ஒளியைக் கண்ட இருள் போல்
ஒளியைக் கண்ட விட்டிற் பூச்சி போல
ஓசையவிந்த பின் ஆடுதுமென்றாற் போல
ஓடி மறைகின்ற மின்னலைப் போல
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குதல் போல 210

ஓட்டை நாழிக்குப் பூண் கட்டினது போல்
ஓராவிற்கு இருகோடு தோன்றினாற் போல
கங்கையிற் படர்ந்தாலும் பேய்ச் சுரைக்காய் நல்லதாகாது போல
கடலைக் கையினால் நீந்திக் கரையேறுதல் போல
கடல் மணலைக் கணக்கிடுதல் போல 215

கடல் திரையை எண்ணுதல் போல
கடலிடைப் பிறந்த முத்து அக் கடலுக்குப் பயனாகாமை போல
கடலிற் காயம் கரைத்தது போல
கடலின் கண்ணே இயங்கும் மரக்கலத்தைப் போல
கடல் உப்பையும் மலைநெல்லையும் கலந்தாற் போல 220

கடல் வெதும்பின் வளாவும் நீர் இல்லாதது போல்
கடன் பட்டார் நெஞ்சம் போல்
கடாக் களிற்றின் மேல் கட்படாம் போல
கடாவும் கடாவும் சண்டை போடும்போது உண்ணி நசுங்கினாற் போல
கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டினாற் போல 225

கடைத் தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தாற் போல
கடைந்த மோரிலே குடைந்து வெண்ணெய் எடுக்கிறது போல
கட்டாந்தரை அட்டை போல
கட்டுக் கடங்காக் காளை போல
கட்டிமேற் சிலந்தி எழுந்தாற் போல் 230

கண்கெட்ட குருடர் போல்
கண் கெட்ட பிறகு சூரிய வணக்கம் செய்வது போல
கண்டு மறைந்த கனவினைப் போல
கண்ணாடி மண்டிலத்து ஊது ஆவி போல
கண்ணில்லாதவன் கண்ணாடியைச் சுமந்தது போல் 235

கண்ணில்லார் பெற்றிழந்தாற் போல்
கண்ணினைக் காக்கும் இமை போல
கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போல
கண் பறி கொடுத்துக் கலங்கினாற் போல
கத்தரிக்காய்க்குக் காலுங் கையும் முளைத்தாற் போல 240

கயிறு இல்லாப் பம்பரம் போல
கரடி புற்றிலே வாய் வைத்தாற் போல
கரதலாமலகம் போல்
கரு இல்லாத வித்தையும் குரு இல்லாத சீடனும் போல
கருங்காலிக் கட்டைக்கு வெள்ளிப்பூண் கட்டினது போல 245

கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப் போல
கருடனைக் கண்ட பாம்பு போல
கருநரைமேற் சூடே போல்
கருப்பங் கொல்லையிலே நெருப்புப்பொறி விழுந்தாற் போல
கருமருந் தறையிற் சிறுபொறி சிதறினது போல 250

கரும்பாலையிற் பட்ட எறும்பு போல
கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தாற் போல
கரும்பு தின்னக் கூலி கேட்டாற் போல
கரும்பு தின்னாமல் வேம்பு தின்பது போல
கரும்பூர்ந்த சாறு போல 255

கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில் மாடம் போல
கரை இழந்த தடாகம் போல்
கரை காணாத கப்பலைப் போல்
கரை தட்டின கப்பல் போல்
கலங்கரை விளக்கம் போல் 260

கலப்பாலில் ஒரு துளி நஞ்சு கலத்தல் போல
கலனழிந்த கைம்மையார் பெண்மை நலம் போல
கல்யாணச் சந்தடியில் தாலிகட்ட மறந்தாற் போல
கல்லிலே நார் உரிக்கிறது போல
கல்லின் மேலிட்ட கலம் போல் 265

கல்லைக் குத்தி கைநொந்தாற் போல
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம் போல்
கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்று
கழுதை பொதிசுமந்தாற் போல்
கழுதைப்பால் குடித்தவன் போல் 270

கழுதையும் குதிரையும் பிணைத்தாற் போல
கழுதையைக் கட்டி ஓமம் வளர்த்தது போல
கறவை நிற்க மலடு கறந்து உளந்தளர்தல் போல்
களை பறியா விளைநிலம் போல
கற்பாறைமேல் விழுந்த மழைத்துளி சிதறுவது போல 275

கற்பிளப்பில் தீயே போல்
கற்றா மனம் போல
கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள் பெற்றுக்கொடுத்த [தலைமகன் போல்
கனகமாரி பொழிந்தது போல
கனல்முன் இட்ட மெழுகுப் பாவை போல் 280

கனியிருக்கக் காயை விரும்புவது போல
கன்மேற் செதுக்கிய எழுத்துப் போல
கன்றினைக் கண்ட பசுப் போல
கன்றுடைத் தாய் போல
கன்றைப் பிரிந்த ஆன் போல 285

கன்றைவிட்டுக் கட்டுத்தறியைப் பிடிப்பது போல
காகத்தின் இருகண்ணிற் கலந்து நின்ற ஒரு மணி போல்
காகம் உறவு கலந்துண்பது போல்
காக்கை யேறிப் பனம்பழம் விழுந்தது போல
காடிக்குப் போய்த் தயிர்கொண்டு வந்தது போல 290

காட்டுக்கு எறித்த நிலாப் போல
காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுத்துய் போல
காணாதது கண்டாற் போல
காதலனைக் கண்ட கற்புடையாள் போல
காதோடு காது வைத்தாற் போல 295

காந்தம் இரும்பைப் பற்றுவது போல
காந்தம் இழுத்த ஊசியைப் போல
காந்தள் மொட்டுப் போல
காந்தனில்லாத கனங் குழலாள் பொற்புப் போல்
காம்பிலா மூழை போல 300

காயும் புழுவிற்குச் சாயும் நிழல் போல
காய்கள் பலபல காய்த்தாலும் அவற்றைத் தாங்கிக்கொள்ளுங் கிளைகள் போல
காய்த்த பலாவின் கனியுண்ண மாட்டாமல் ஈச்சம்பழத்துக்கு இடருற்றது போல
காய் முற்றினால் தீங்கனி யாதல் போல
கார்த்திகைப் பிறை கண்டவன் போல் 305

கார் மருங்கின் மின்னுப் போல
காலத்திற் பெய்த மழை போல
காலில் பட்டது கண்ணிற் பட்டது போல
காவிரிக்கரைப் பசுப் போல்
காற்றின் வாய்ப்பட்ட பூளைமலர் போல 310

காற்றுடன் நெருப்புக் கூடினாற் போல
கானலைச் சலமாய்க் கண்டது போல
கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போல
கிணற்றிலே கல்போட்டது போல
கிணற்றுத் தவளை போல் 315

கிண்டி விட்டுக் கேளிக்கை பார்க்கிறது போல்
கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பு போல
கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுப்பது போல
கிள்ளுக் கீரை போல
கீரியும பாம்பும் போல 320

கீரி வாய்ப் பாம்பு போல
கீழே பாம்பென்றால் மேலே பார்க்கிறவன் போல
குங்குமஞ் சுமந்த கழுதை போல
குடங்கருட் பாம்போடு உடனுறைந்தற்று
குடத்துள் விளக்குப் போல 325

குடல் கூழுக்கழக் கொண்டை பூவுக்கழுவது போல
குடியிருக்கும் வீட்டின் கூரையைப் பிடுங்குவது போல
குட்டிச் சுவரிலே தேள் கொட்டத் தண்ணீர் மிடாவில் நெறி கட்டினது போல
குட்டி போட்ட நாய் போல
குதிரை கீழே தூக்கிப் போட்டதுமன்றி மேலே ஏறியு மிதித்தது போல 330

குப்பையிற் கிடந்தாலும் மாணிக்கத்தின் பெருமை குறையாதவாறு போல
கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தாற் போல

கும்பிட்ட கோயில் தலைமேல் இடிந்து விழுந்தாற் போல
குயில் குரலும் மயில் அழகும் போல்
குயில் கூவினாற் போல் 335

குரங்கின்கைக் கொள்ளி கொடுத்தாற் போல
குரங்கின் கையில் சிக்கிய பாம்பு போல
குருடன் இராசவிழி விழித்தாற் போல
குருடனுக்குக் குருடன் கோல் கொடுத்து வழிகாட்டுவது போல்
குருடன் இருளுக் கஞ்சுதல் போல 340

குருடன் கைக் கோலைப் பிடுங்கினது போல
குருடும் குருடும் குழிவிழுந்தாற் போல்
குருடும் செவிடும் கூத்துப் பார்த்தாற் போல
குருட்டுக் கோழி தவிட்டுக்கு வீங்கினது போல
குருட்டுப் பூனை விட்டத்திற் பாய்ந்தது போல 345

குருத்தின் கரும்பு தின்றாற் போல
குருவி கழுத்தில் தேங்காயைக் கட்டினது போல
குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பு போல
குலைக்கிற நாய்க்கு எலும்பைப் போட்டாற் போல
குழந்தையையும் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுவதுபோல

குழியில் வீழ்ந்த யானை போல
குளத்தின்மேல் கோபித்துக்கொண்டு கால் கழுவாமல் போனது போல்
குளம் வெட்டப் பூதம் புறப்பட்டது போல
குளவிக் கூட்டைக் கோலால் குலைத்தாற் போல
குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போல 355

குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில் விழுந் தளறுபாய்தல்போல்
குள்ளனைக் கொண்டு ஆழம்பார்க்க வந்தது போல்
குறிச்சி புக்க மான் போல
குறுஞ்சிரிப்புக்கு மருந்து சாப்பிட உள்ள சிரிப்பும் போனாற்போல
குறை குடம் கூத்தாடுவது போல 360

குன்றிமணி யிடத்திலும் கறுப்புண்டாயிருப்பது போல்
குன்று கண்டு குலைக்கும் நாய்போல
குன்று முட்டிய குரீஇப் போல
குன்று மேலிட்ட விளக்கைப் போல
கூட்டத்திற் கட்டுச்சோறு அவிழ்த்தாற் போல 365

கூத்தாட் டவைக்குழாம் போல
கூத்துப் பார்க்கப் போன இடத்தில் பேய்பிடித்தது போல

கூவலாமை குரைகடலாமையைக் கூவலோடொக்குமோ கடல் என்றல்போல
கூற்றத்தைக் கையால் விளித்தற்று
கெடுத்துத் தேடும் நன்கலம் எடுத்துக் கொண்டாற் போல 370

கெண்டையைப் போட்டு வராலை இழுத்தாற்போல்
கைக்கும் மருந்தைக் கருப்பங்கட்டியிற் பொதிந்து அருந்தல்போல
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்புப் போல
கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தது போல
கைப்பழத்தைப் போட்டுவிட்டுத் துறட்டுப்பழத்துக்கு ஆசைப் பட்டது போல 375

கையாடாத ஆயுதம் துருப் பிடிப்பது போல
கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பது போல
கொடுக்கிலாதானைப் பாரியே என்பது போல
கொல்லன் உலையூதுந் தீயே போல்
கொழுகொம்பற்ற கொடிபோல 380

கொழுச் சென்றவழித் துன்னூசி செல்லுமாறு போல்
கோடை இடி குமுறினாற் போல
கோடையிடியும் மழையும் போல
சகடக்கால் போல
சணப்பன் வீட்டுக் கோழி தானே விலங்கில் மாட்டிக்கொண்டது போல 385

சந்நியாசி பூனை வளர்த்தது போல
சமன் செய்து சீர்தூக்குங் கோல் போல
சருக்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தாற் போல
சாடிக்கு வாய்த்த மூடி போல்
சாடிற் கறங்கிடும் பம்பரம் போல் 390

சாந்தகுண மில்லாதார் தவம் போல்
சாறு பிழிந்த களி போல
சிங்கத்தின் காட்டைச் சிறுநரி வளைத்தாற் போல
சிட்டுக்குருவி தலைமேல் பனங்காயைக் கட்டுவது போல
சிட்டுக் குருவிமேல் பாரதந் தொடுத்தது போல் 395

சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரை மலர் போல
சித்திரப் பதுமை போல
சிவபூசை வேளையிலே கரடி புகுந்தாற் போல
சிறகு இழந்த பறவை போல
சிறிய கண்ணாடியில் பெரிய மலையைக் காண்பது போல 400

சிறியவன் செல்வம் போல்
சிறியார் கைச் செம்பொன் போல
சிறியார் மணற் சோற்றிலே தேக்கிடுமா போல்
சிலையில் எழுத்துப் போல
சிறைபெரு நீர் போல் 405

சிற்றருவிகள் பலவுஞ் சென்று ஓர் யாற்றில் கலத்தல் போல
சீதேவியுடன் கூட மூதேவி பிறந்தாற் போல
சுடச் சுடரும் பொன் போல
சுட்டமண்ணும் பச்சைமண்ணும் ஒட்டாதது போல்
சுத்தமான துணியில் சாயம் ஏறுவது போல 410

சும்மா வந்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்ப்பது போல
சுழல் காற்றில் அகப்பட்ட துரும்பு போல
சூரியனைக் கண்ட தாமரை போல
சூரியனைக்கண்ட பனி போல
சூரியனைப் பார்த்து நாய் குரைத்தாற் போல 415

செங்கதிரின் முன் மதியந் தேசடங்கி நின்றிடல்போல்
செங்கமலப் போதலர்ந்த செவ்விபோல்
செந்தீயினிடைப் பொரிந்து தெறித்த பொரிபோல்
செந்நெல்லால் ஆய செழுமுளை மற்றுமச் செந்நெல்லேயாகி
விளைவது போல்
செப்பின் புணர்ச்சி போல 420

செய்யாட் கிழைத்த திலகம் போல
செவிடன் காதில் சங்கு ஊதியது போல
செறித்திடுஞ் சிறையினை உடைத்திடும் புனல் போல்
சேக்கை மரன் ஒழியச் சேண் நீங்கு புள் போல
சேணீங்கு புட்போல் 425

சேற்றிலே செங்கழுநீர் பூத்தாற் போல
சேற்றிலே நட்ட கம்பம் போல
சேற்றிலே முளைத்த செந்தாமரை போல
சொறியக் கொடுத்த பசுப் போல
சோற்றைப் போட்டுத் தொண்டையை நெரிப்பது போல 430

ஞாயிறில்லை யெனும் பிறவிக் குருடன் போல
தகைமாண்ட நெடுஞ்சுவர்க்கு வகைமாண்ட ஓவியம் போல
தங்கக் கம்பி போல
தங்கத்தை உருக்கிவிட்டது போல
தடங்கரை பேர்த்து வெள்ளத்தை விடுதல் போல 435

தடற்றுள் வாள் போல்
தண்ணீரில் தத்தளிப்பவனுக்குச் சிறு துரும்பு கிடைத்தாற் போல
தண்ணீரும் பாசியும் கலந்தாற் போல
தரித்திரனுக்குப் புதையல் கிடைத்தாற் போல
தலைக்கடை நாய் போல 440

தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போல
தவிடு தின்பவனை அமுது தின்னச் சொன்னாற் போல
தழலது கண்ட மெழுகது போல
தழலிற் படு தளிர் போல்
தன் கை தனக்குதவுமாறு போல 445

தன்னை நம்பி உடன் கிடந்தவனை மடி தடவினவனைப் போல
தாடிபற்றி எரியும்போது சுருட்டுக்கு நெருப்புக் கேட்டது போல்
தாமரைக் கொட்டையின் அல்லியே போல
தாமரைப் பொய்கையிற் புகும் தனிப் பேடைபோல்
தாமரையிலை நீர் போல் 450

தாயில் கழுதையில் அண்டம் சுமந்தானும் போல்
தாயில் தூவாக் குழந்தை போல
தாயின் துணையை எதிர்நோக்கும் குழந்தையைப் போல
தாய்கூடப் பிறந்த மாமனிடத்தில் குலங் கோத்திரம் பேசியது போல்
தாய்ப்பாலில்லாத குழவி போல 455

தாய்ப்பாலுள் நஞ்சு ஆய்பவர் போல
தாரகை நடுவண் தண்மதி போல
தானாய்வருகிற சீதேவியைக் காலால் உதைத்துத் தள்ளுவது போல
திங்கள் கண்ட கடல் பொங்குவது போல
திரிசங்கு சுவர்க்கம் போல 460

திருடனைத் தேள் கொட்டினது போல
திருட்டு நாய்க்குச் சதங்கை கட்டினாற் போல
திரையிலாக் கடல் நீர் போல
தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்ப்பது போல்
தீயினாற் சூழப்பட்ட வீடு போல 465

துஞ்சுபுலி இடறிய சிதடன் போல்
துப்பாக்கி வயிற்றில் பீரங்கி பிறந்தாற் போல
தும்பைவிட்டு வாலைப் பிடிப்பது போல்
துரும்பு பற்றிக் கடல் கடக்குந் துணிபு போல
துரும்பு பெருத்துத் தூணாற் போல 470

தூங்குகிற புலியைத் தட்டி எழுப்பினது போல
தூண்டா விளக்குப் போல்
தூண்டில் நுனி மச்சத்துக்கு ஆசைப்பட்டு உயிரிழக்கும் மீன் போல்
தூண்டிற்காரனுக்குத் தக்கைமேற் கண்போல்
தூண்டிலின் மீன் போல 475

தூய இளம்பச்சிலையைக் கீடம் அறப்பற்றி அரிப்பது போல
தூரின் கரும்பு தின்றாற் போல
தென்றல் முற்றிப் பெருங்காற்றானாற் போல
தேடிப்போன மருந்து காலில் அகப்பட்டது போல்
தேரை குடித்த தேங்காய் போல 480

தேறுபடு சின்னீர் போல
தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும் கல்வி போல
தொடு மணற்கேணி நீர் சுரப்பது போல
தொட்டனைத் தூறு மணற்கேணி போல
நஞ்சு தலைக்கேறியது போல 485

நடு ஊரில் ஒரு நன்மரம் பழுத்தாற் போல
நடுக்கடலில் கப்பல் உடைந்ததோடு தெப்பமும் உடைந்தாற் [போல
நடுவூருள் நச்சுமரம் பழுத்தாற் போல
நடுவூருள் வேதிகைச் சுற்றுக் கோட்புக்க படுபனை போல்
நடைத்தூக்கங் கொண்டவன் போல் 490

நண்டு கால் விரித்தாற் போல
நண்டைச் சுட்டு நரியைக் காவல்வைத்தாற் போல
நண்பகல் வெயிலிற்பட்ட புழுப் போல்
நண்பனுக்கு நண்பன் கண்ணாடி போல
நம்பினோரை நட்டாற்றிற் கைவிடுதல் போல 495

நரிப்படைக் கொரு பாகும் போல
நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்க்கிறது போல
நரியைக் குதிரை செய்வது போல
நல்ல பால் கலத்தீமையால் கெட்டுப்போவது போல்
நல்ல மரத்திலே புல்லுருவி பாய்ந்தது போல 500

நவில்தொறும் நூல்நயம் போல
நள்ளிருட் காலம் போல
நறுநெயுறு குடத்து எறும்பு நண்ணல் போல
நறுந்தாதுண்டு நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டுபோல
நன்மணி யிழந்த நாகம் போல 505

நன்ஞரிற் பூட்டிய சூத்திரப் பாவை போல்
நா இன்புற நக்கிக் கொல்லும் கவயமாப் போல்
நாடு மகவுக் குதவும் நற்ருய் போல
நாணறுந்த வில் போல்
நாணுக்கு வில் போல 510

நாண்வழிக் காசு போல
நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போல்
நாயும் களிச்சட்டியும் போல
நாயும் பூனையும் போல்
நாய்க்குத் தவிசிட்டாற் போல 515

நாய்பெற்ற தெங்கம் பழம் போல
நாய்வாலைப் பற்றி நதி கடத்தல் போல
நாய் வெற்றெலும்பைக் கடித்துக் கடித்து இன்புறுதல் போல்
நாராசத்தைக் காய்ச்சிக் காதில் ஊற்றினுற் போல
நிதியஞ் சொரிந்த நீலி போல 520

நிலத்து அறைந்தவன் கை பிழையாதற்று
நில நலத்தால் நந்திய நெல்லே போல்
நிறைந்திருந்த தோர் கொள்கலம் பிறிதொன்றற்கு இடங்
கொடாதது போல்
நிறுத்தறுத்துச் சுட்டுவைத்துப் பொன் கொள்வான் போல் 525

நிறைபொதியிலே கழுதைவாய் வைத்தாற் போல்
நீரற்ற விடத்திலே ஆம்பல்தாள் வாடலே போல்
நீரிடைப் பாசி போல்
நீரின்றி அமையாத உலகம் போல
நீருடை நிலத்து நிவந்த நீள் மணமரம் வெப்பத்தால் தெறப்
படாதது போல 530

நீரைப் பிரித்துப் பாலைப் பருகும் அன்னம் போல
நீரொழியப் பாலுண் குருகினைப் போல்
நீர்க்குமிழி போல்
நீர்க்குன் பாசி போல்
நீர்மருங்கின் கொடிப் போல்
நீர்ச்சுழியி லகப்பட்ட வண்டு போல 535

நீர்மேல் எழுத்துப் போல
நீர்வழிப் படூஉம் புணைபோல்
நீர்வழி மிதவை போல்
நீள்வெயிற் கானத்தில் நல்ல நீர்த்தடம் போல
நீறுபூத்த நெருப்புப் போல 540

நுணலுந் தன் வாயாற் கெடுவது போல
நுனிக்கிளையி லேறி அடிமரத்தை வெட்டுவது போல
நுனிக்கொம்பேறி அஃதிறந் தூக்கினாற் போல
நுனிப்புல் மேய்ந்தாற் போல
நுனியின் கரும்பு தின்றாற் போல 545

நூலில்லாமல் மாலை கோத்தது போல
நூலும் மணியும் போல
நெஞ்சு நோமென்று தலை துமிப்பான் தண்ணளி போல்
நெடுஞ்சுரத்து நின்ற தனியரசம் போல
நெடுஞ்சுழிப்பட்ட நாவாய் போல 550

நெய்யில்லா உண்டி போல்
நெருப்பிடை நெய் சொரிந்தாற் போல
நெல்லிக்காய் மூட்டையைக் கொட்டினாற் போல
நெல்லினின்றும் பதரை வேறாகப் பிரிப்பது போல
நெற்குத்தி யுண்ணாது உமிக்குத்திக் கைசலித்தாற் போல 555

நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல
நோயாளிக்கு ஆசை வார்த்தை சொன்னாற் போல
நோயாளி தலைமாட்டில் பரிகாரி இருந்து அழுதாற் போல
நோயுண் மருந்து தாயுண்டாற் போல
பகலவன் முன்னர்ப் பாயிருள் மாய்ந்தாற் போல 560

பசித்த கணக்கன் பழங்கணக்குப் பார்த்தாற் போல
பசித் துண்பவனைப் போல
பசியாதிருக்க மருந்து கொடுக்கிறேன் பழையது இருந்தால்
போடு என்பது போல
பசியா வரம்படைத்த தேவர் போல
பசுத்தோல் போர்த்த புலி போல் 565

பசுமட் கலத்துள் நீர் போல
பசுமரத்தாணி யறைந்தாற் போல
பசு வால் பற்றி நதி கடத்தல் போல
பசுவுண்ட தெண்ணீர் தேம்படு அமுதம் போல
பசுவைக் கொன்று செருப்புத் தானம் செய்தாற் போல 570

பச்சை மஞ்சளைப் பிளந்தாற் போல்
பச்சை மரத்திற் பேரிடி விழுந்தாற் போல
பஞ்சுப் பொதியில் நெருப்புப் பட்டாற் போல
படிப்பில் ஆசைவைத்தவன் பாடத்தைப் பாராட்டுவது போல்
படை கொண்டார் நெஞ்சம் போல் 575

பட்டப்பகலிலே விண்மீன் கண்டாற் போல
பட்டப்பகல் போல
பட்டி மாட்டுக்குக் கட்டை கட்டினது போல
பண்ணமைத் தெழுதப்பட்ட பாவை போல்
பயன்மரம் உள்ளூரில் பழுத்தாற் போல் 580

பயிரிடைப் புற்களைந்து நெற்பயன் கொள்ளும் ஒருவன் போல
பரிதி கண்ட பங்கயம் போல
பருகற் கமைந்த பால் நீரளாயது போல்
பருத்தி புடைவையாய்க் காய்த்தது போல
பருந்தின் வழி நிழல் போல 585

பலசரக்குக் கடைக்காரனைப் பயித்தியம் பிடித்தது போல
பல மீனினது நடுவே செல்லும் மதியத்தைப் போல
பலாப் பழத்தில் மொய்த்த ஈப் போல
பல்லுப் பிடுங்கின பாம்பு போல
பல்லற்ற பாம்பு போலும் கொடுக்கற்ற தேள் போலும் 590

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று வல்லதாம் தாய் நாடிக் கோடல் போல்
பழங்கள் பெருக்கப் பெருக்கக் கிளைகள் தலைகுனிவது போல்
பழந் தேர் வாழ்க்கைப் பறவை போல்
பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போல்
பழம் பழுத்தால் கொம்பில் தங்காதது போல் 595

பழுமரம் நாடிய பறவை போல
பழைய தரித்திரனுக்குப் பணங் கிடைத்தாற் போல
பள்ள உவர்க்கடலில் பாய்ந்தோடும் வெள்ளம் போல்
பள்ளத்து வழி வெள்ளம் போல்
பறக்கிற பட்சிக்குச் சிறகு ஒடிந்தாற் போல 600

பறைபட வாழா அசுணமாப் போல
பறை யறைந்தாற் போல
பனியை நம்பி ஏர் பூட்டினது போல
பனை ஏறி விழுந்தவனைக் கடா ஏறி மிதித்தது போல
பனையிலிருந்து விழுந்தவனைப் பாம்பு கடித்ததுபோல் 605

பன்மீ னடுவட் பான்மதி போல
பாக்கு வெட்டியில் அகப்பட்ட பாக்கே போல
பாசிலைப் பந்தர் வேய்ந்தாற் போல
பாச்சி பாச்சி என்றழும் பாலர்க்குப் பூச்சி பூச்சி என்பது போல
பாய்மரச் சுற்றிலகப்பட்ட காக்கை போல் 610

பாம்பின் தலை நக்கியது போல
பாம்பின் வாய்த் தேரை போல
பாம்புக்குத் தலையும் மீனுக்கு வாலையுங் காட்டும் விலாங்கு மீனைப் போல
பாம்புக்குப் பால் வார்த்தாற் போல்
பாம்புக்கு மருந்து கேட்கத் தேளுக்கு மந்திரித்தது போல 615

பாம்புண்ட நீரெல்லாம் நஞ்சாதல் போல
பாய்மரக் கொடிபோல்
பாலிற்படு நெய் போல
பாலுக்குப் பூனையைக் காவல் வைத்தது போல
பாலுடன் கூடிய நீர்போல 620

பாலுணுங் குழவி கையிருப்ப மல்யுத்தஞ் செய்பவர் போல
பாலுந் தேனுஞ் சேர்ந்தாற் போல
பாலைப் பருகாது கள்ளைக் குடிப்பவர் போல
பாலோ டளாயநீர் பாலாகு மல்லது நீராய் நிறந்திரிந்து தோன்றாதது போல
பாலை நினைந்தூட்டும் தாய் போல 625

பாவிடை யாடு குழல் போல்
பாழடைந்த பழங்குட்டிச் சுவர்போல
பாழுக் கிறைத்த நீர் போல
பாற்கடற் பனி மதி போல்
பாற்கூழை மூழை சுவை யுணராதது போல் 630

பிஞ்சிலே பழுத்தாற் போல
பிடித்தகொம்பும் ஒடிந்து மிதித்த கொம்பும் ஒடிந்தாற் போல
பிட்டுத் தின்று விக்கினாற் போல
பிரிவரிய ஊசிவழிப் பின்தொடரும் நூல் போல
பிரையுறு பால் போல 635

பிள்ளை பெற்றவளைப் பார்த்து மலடி பெருமூச்சு விட்டது போல்
பிள்ளையாரைப் பிடித்த சனியன் அரச மரத்தையும் பிடித்ததுபோல
பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங்காய் முடிந்த கதை போல
பிள்ளையில்லாச் செல்வங் கள்ளியின் சோறே போல
பிறர்மண் கொள்வான் சென்று தம் மண்ணும் இழத்தல் போல்

புடத்தின் மாற்றுயரும் பொன்னே போல
புண்ணிலே கோல் இட்டது போல
புதல் மறைந்து வேட்டுவன் புள் சிமிழ்த்தற்று
புதுக்குடத்தில் வார்த்த தண்ணீர் போல்
புது மணவறைப் பெண் போல 645

புது வெள்ளம் போல
புதையல் காத்த பூதம் போல
புதையல் எடுத்தவனைப் போல
புயற்காற்றினால் அசைக்கப்படாத குன்று போல
புரையற்ற பாலினுள் நெய்கலந்தாற் போல 650

புலி முழக்கங் கேட்ட புல்வாய் போல்
புலிப்பால் குடித்தவன் போல்
புலியும் பசுவும் பொருந்தி வாழ்ந்தாற் போல
புலியைக் கண்ட மான் போல
புலியைப் பார்த்து நரி சூடிட்டுக் கொண்டது போல 655

புல் நுனிமேல் நீர் போல
புளிக்கண்டார்க்குப் புனலூறுமா போல்
புளியந்தோடும் பழமும் போல
புள்ளுக்குப் புன்னை இருப்பிட மாயினாற் போல
புற்றிலே ஈசல் புறப்பட்டது போல 660

புற்றிலே கிடந்த புடையன் எழும்பினது போல்
புனல் ஓடும் வழியிற் புற்சாய்ந்தாற் போல்
புனையா ஓவியம் போல
பூட்கை யில்லோன் யாக்கை போல்
பூட்டுந் திறப்பும் போல 665

பூமி ஆளலாமென்று மனப்பால் குடிக்கிறது போல
பூவரசின் பழுப்புப் போல
பூவாதே காய்க்கும் மரம் போல
பூவினிற் பொலிகின்ற கந்தம் போல
பூவும் மணமும் போல 670

பூவுடன் கூடிய நாரும் மணம்பெற்றாற் போல
பூனைமுன் கிளி போல
பூனைவாய் எலிபோல
பெருக்காற்று இடிகரை போல
பெருங்காய மிருந்த குடுக்கை வாசனை போகாதது போல 675

பெற்ற இளங்கன்றைப் பிரியாமற் பின்னோடிச் சுற்றும் பசுப் போல்
பெற்றதாய் பசித்திருக்கப் பிராமண போசனம் செய்வித்தது [போல
பேய்க்கு வேப்பிலை போல
பேய்பிடித்தவன் செயல் பேய்ச்செயல்போல
பொம்மலாட்டுவக்கும் தோலுருப் போல 680

பொதிமாடு சுமந்தாற் போல்
பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதல் போல
பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லாது இழிந்தவை காமுறூஉம் ஈப்போல்
பொள்ளற் குடத்தில் வார்த்த தெள்ளமுதம் போல
பொறியறு பாவை போல் 685

பொற்குன்றஞ் சேர்ந்ததோர் காக்கை பொன்னுதல் போல
பொன் காத்த பூதம் போல
பொன் படைத்தான் தன்னால் பொன்னுக்குப் பயன் இல்லாதது போல்
பொன்னுடை விரித்தாற் போல
பொன்னாற் செய்த பூங்கொடி போல 690

பொன்னின் நலம் சுட்டறிவது போல
பொன்லின் விளக்கானாலும் தூண்டுகோல் வேண்டுவது போல
போர்முனையிலே ஆயுதந் தேடுகிறது போல
போன சனியனைத் தாம்பூலம் வைத்தழைத்தாற் போல
போன சுரத்தைப் புளியிட்டு அழைத்தாற்போல 695

மகத்திற் புக்கதோர் சனி போல
மங்குலைக் கண்ட மயில் போல
மஞ்சு சூழ்ந்த மதிபோல
மடுத்தவாயெல்லாம் பகடுபோல
மடை திறந்த வெள்ளம் போல் 700

மடைவாய்க் கொக்குப் போல
மட்குடத்து உள நீர் கசிவது போல
மணமுள்ள மலரை வண்டுகள் சூழ்ந்தாற் போல
மணமுற்ற பொன்மலர் போல
மணற் சோற்றிற் கல் ஆய்வது போல 705

மணிக்கலம் கதுவாய்ப் பட்டது போல்
மணியும் ஒளியும் போல்
மண் குதிரையை நம்பி ஆற்றி லிறங்கியது போல
மண்ணின் குடம் போல
மண்மாண் புனை பாவை போல் 710

மதங்கொண்ட யானையைப் போல
மதிக்கண் மறுப் போல
மதியைப் பிரிந்த வான் போல
மதில்மேல் ஏறின பூனை போல
மதுவுண்ட குரங்கு போல 715

மத்தேறி யுடை தயிர் போல
மத்திட்ட தயிர் போல
மயிர் சுட்டுக் கரியாகாதது போல
மயிலைக் கண்டு வான்கோழி ஆடினாற் போல
மரபு அறியாதவன் மணம்பேச வந்தாற் போல 720

மரம் பழுத்தால் வௌவாலை வா வென்று கூவியழைப்பார் வேண்டாமை போல
மலத்தைக் கண்ட நாய்க்கு வாயூறுவது போல
மலைப்பாம்பு புரள்வது போல்
மலையாடு மஞ்சு போல
மலையும் மலையும் மோதினாற் போல 725

மலைமிசைத் தோன்றும் மதியம் போல்
மலைமிசை விளக்குப் போல
மலையுடன் மண்ணாங்கட்டி எதிர்ப்பது போல
மல்லாந்து படுத்து எச்சில் உமிழ்வது போல
மழைக் கொண்டலில் மின்னுப்புக்கு ஒளித்தாற் போல 730

மழைமுகங் கண்ட பயிர்முகம் போல
மன்றத்துப் புன்னை போல்
மாரிக்காலத்து மழை போல
மாரிக்கால மதிபோல
மா நிலத்திற்கு மணிவிளக்குப் போல 735

மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே என்றல்போல்
மின்மினி ஒளிபோல
மின்னொளி தோன்றி மறைந்தாற் போல
மீகாமனில்லா மரக்கலம் போல
மீனை மீன் விழுங்கினாற் போல 740

முக்கால் பணத்துக் குதிரை மூன்று பணத்துப் புல் தின்றாற் போல
முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல
முட்பூவில் தேன் போல்
முதலை பிடித்தது போல
முயலைவிட்டுக் காக்கைப்பின் போனது போல 745

முயற்கொம்பு போல
முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பது போல
முறுக்கிய கயிற்றினால் விடுக்கப்படும் பம்பரம் போல்
முன்சிறுமை யடைந்து பின் செல்வத்தைப் பெற்றவன் அச் செல்வத்தைப் பாதுகாப்பது போல
மூட்டுப் பூச்சி போல 750

மூழை உப்பறியாதது போல்
மெருகிட்டது போல
மெல்ல இருப்பினும் நாயிருந்தது போல
மேட்டுக்கு விதைத்த விதைபோல்
மொட்டைத் தலைச்சியைக் கூந்தலழகி என்பது போல 755

மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவது போல்
மோத்தையைக் கண்ட காக்கை போல்
மோப்பக் குழையும் அனிச்ச மலரைப்போல
மோர் சுடுகிறதென்று ஊதிக் குடிக்கிறது போல
யாப்புடைக் காழும் கிடுகும் போல 760

யாற்றொழுக்குப் போல
யானைக்கு முன் பூனை போல
யானை தின்ற விளாங்கனி போல
யானைமேல் போகிறவனைச் சுண்ணாம்பு கேட்பது போல
யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லுவது போல் 765

யானையால் யானை யாத்தற்று
வண்டினம் பூத்தொழி கொம்பின்மேற் செல்லாதது போல்
வதங்கிய இலைகளின் நடுவே ஓர் இளந்தளிர் தோன்றுதல் போல
வயிரம்செறிப்பினும் பன்றிசெயிர் வேழமாகுதல் இல்லாதது போல
வலையிற் சிக்கிக்கொண்ட மானைப்போல் 770

வலையினின்றுந் தப்பியோடும் மான் போல
வழிகாட்டுங் கைகாட்டிகள் போல
வழிநடை வார்த்தை வாகனம் போல்
வழுவி விழுவோனைச் சடுதியில் ஒருவர் தாங்கினாற் போல
வளர்த்த கடா மார்பிலே பாய்ந்தது போல 775

வளர் மதியம் போல்
வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று
வறியவன் இளமை போல
வறுத்த பயறு முளைத்தாற் போல
வற்றக் காய்ச்சிய கன்னற்பாகு போல 780

வன்பாற்கண் வற்றல் மரந் தளிர்த்தற்று
வாடு பயிர்க்கு வருமாமழை போல
வாணிக முதல் போல
வாய் காய்ந்த புலி ஆள்மேலே விழுந்தது போல
வாய்க்கொழுப்புச் சீலையில் வடிந்தது போல 785

வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அணைந்தது போல
வாலில்லாத குரங்கு போல

வாழுகிற பெண்ணைத் தாயார் கெடுத்தது போல்
வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல
வாழை மேலே குளிர்ந்து உள்ளே வெப்பங் காட்டுவது போல 790

வானத்தின் மீனுக்கு வன்தூண்டிலிட்ட வகையது போல்
வானத்தின் மீனைக் கணக்கிடுதல் போல
வானூர் மதியம் போல்
வான் நிழல் போல்
வான் முகிலும் மின்னும் வறுநிலத்து வீழ்ந்தது போல் 795

விச்சதின்றி விளைவு செய்வது போல்
விண்ணினின்றும் இறங்கிய மின்கொடி போல
விண்மீன் நடுவிற் செல்லுந் தண்மதி போல
வித்துக்கு விட்ட சுரைக்காய் போல
விரிதலைப் பேய் போல 800

விரிவெயிலில் விளக்கொளி போல
விலங்கை விட்டுத் தொழுவில் மாட்டிக் கொண்டது போல்
விழலுக் கிறைத்த நீரே போல்
விழுகிற சுவரிலே கைவைத்தாற் போல
விழுகிற பிள்ளைக்கு அரிவாள் அண்டை கொடுத்தாற் போல 805

விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறு போல
விளக்கிலா இடத்தில் வெளிச்சம் இராதது போல
விளக்கிலே மொய்த்த விட்டில் போல
விளக்கின் முன் இருள் போல
விளக்கு நெய் தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தது போல் 810

விளக்குப் புக இருள் மாய்ந்தது போல
விளக்குமாற்றுக்குப் பட்டுக் குஞ்சம் கட்டியது போல
விளக்கொளிக்கு ஆசைப்பட்ட விட்டில் போல
விளையாட்டுச் சண்டை வினைச்சண்டையானது போல்
விளையும் பயிர் முளையிலே தெரிவது போல 815

வீட்டைக் கட்டிக் குரங்கைக் குடிவைத்தது போல்
வெங்காயச் சருகு போல
வெண்கலக் கடையில் மதயானை புகுந்தாற் போல
வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தாற் போல
வெந்த புண்ணில் வேலெறிந்தாற் போல 820

வெய்யிலில் பட்ட புழுப் போல
வெய்யோன் வெயில் முன் எரிதீபம் போல்
வெள்ளிடை மலை போல

வெள்ளந் தடுத்தல் அரிதே போல்
வெள்ளிவெண் குடத்துப் பால் சொரிவது போல 825

வெறுங்கையில் முழம் போடும் வேலையிலா வீணன் போல
வெறுவாய் மெல்லுபவர்கட்குச் சிறிது அவல் அகப்பட்டது போல
வெற்றோசை இடும் மணி போல்
வேடர் கையிலகப்பட்ட தேன் கூண்டு போல
வேட்டை பார்க்கப் போய் வில்லங்கத்தில் மாட்டிக்
கொண்டது போல் 830

வேலியே பயிரை மேய்ந்தாற் போல்
வேல் தொளைத்த புண்ணிலே கொள்ளிக்கட்டையைச்
செருகினது போல்
வேழம் முழங்கினாற் போல
வேழத்திற் பட்டுருவுங் கோல் பஞ்சிற் பாயாதது போல
வேள்விக் கொலைக்கு வரும் ஆட்டின் மனம் போல
வையத் திறந்தாரை எண்ணிக் கொண்டற்று 835

# அருஞ்சொற் பொருள் அகரவரிசை

அகழ்தல் - தோண்டுதல்
அங்கணம் - சலதாரை, சேறு
அளிந்த - கனிந்த, பழுத்த
இழுக்கல்-தவறுதல், வழுவுதல்
இறந் தூக்கின் - கடந்து மேற் செல்லின்
ஈங்கை - இண்டங் கொடி
உக்க - விழுந்த, சொரிந்த
எய்த்தல்-இளைத்தல், களைத்தல்
ஒருமைப்பாடு - ஒன்றிப்பு
கட்படாம் - கண்மூடி
கதழ்வு - மிகுதி
கரதலாமலகம் - உள்ளங்கை நெல்லிக்கனி
கலங்கரை விளக்கம் - விளக்குக் கூண்டு
கறங்கு - காற்றாடி
கன்னல் - கரும்பு, சர்க்கரை
கிராதர் - வேடர், குணமற்றவர்
குரீஇ - புள்
குறிச்சி - சிற்றூர்
கூவல் - கிணறு
கூற்றம் - எமன்
கேளிக்கை-மகளிர் விளையாட்டு
கோடு - விலங்கின் கொம்பு
சரடு - நூல், கொடி
சிமிழ்த்தல் - பிடித்தல்
சிலந்தி - கிரந்திப் புண், பரு
சேண் - ஆகாயம்
தக்கை - நெட்டி
தடறு - வாளுறை
தவிசு - சேணம்
தாழி - பானை, சாடி
திடர் - மலைமேடு
துய் - பஞ்சு
தவ்வா - உண்ணாத
துறட்டு - அலக்கு
துன்னூசி - தையலூசி
நறுநெய் - பசுநெய்
நந்திய - விளைந்த
நாவாய் - கப்பல்
நீர்மிசை - நீர்மேல்
நீவி - சீலை
நுணல் - தவளை
பகடு - எருது
பளுவு - சுமை
புடையன் - பாம்பு
புதல் - புதர்
புல்வாய் - மான்
புழல் - துவாரம்
புள் - பறவை
புனல் - நீர்
பூளை - இலவம் பஞ்சு
பொள்ளல் - பொத்தல்
மங்குல் - மேகம்
மஞ்சு - மேகம்
மடு - குளம்
மடுத்தவாய் - தடைபடுமிடம்
மறு - குற்றம்; மாசு
மன்றம் - வெளியிடம்
மூழை - அகப்பை, துடுப்பு
மோத்தை-வெள்ளாட்டுக் கடா
வாவி - குளம்
விச்சு - விதை
வில்லங்கம் - தடை
விளித்தல் - கூப்பிடல், அழைத்தல்
வீறு - வலிமை
வைத்தூறு - வைக்கோற்போர்
வேழம் - யானை

---

திருவரங்கனார் அச்சகம், சென்னை-13. (II/2)

தமிழ்ப் பாதுகாப்புக் கழக வெளியீடு : க

ஓம்

# மரபுத்தொடர் அகரவரிசை

## [IDIOMS & PHRASES]



இடநோக்கி மரபுத்தொடர் அமைத்துப்
பொருள்சிறக்கப்
பேசவும் எழுதவும் கற்பிப்பது



கிடைக்குமிடம் :
திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1
1977

முதற் பதிப்பு : 1938     இப்பதிப்பு : ஆக. 1977

# முன்னுரை

நம் முன்னோர் பொருட்பொலிவுமிக்க அருந்தொடர் மொழிகளைப் பேச்சிலும், நூலிலும் பரக்க வழங்கிவந் திருக்கின்றார்கள். அங்ஙனம் அச் சொற்களை வழங்கி வந்த முறையே மரபாகும். அம் மரபு தவறி வழங்கினால் அது வழுவாகும்.

இம் மரபுத்தொடர்களைத் திரட்டி இதுகாறும் யாரும் தனி நூலாக வெளியிட்டதாகத் தெரியவில்லை. ஆங்கில மொழி கற்கப் புகுவார்க்கு உதவியாகப் பழமொழிகள், உவமைகள், மரபுமொழிகள் போன்ற கருவிநூல்கள் பல வெளிவந்திருக்கின்றன. அங்ஙனந் தமிழ்மொழி பயில்வார்க்கும் உதவியாதற்பொருட்டு, முன்னர்ப் பழமொழி, உவமை அகரவரிசைகளை வெளியிட்டு அவற்றின் தொடர்பாக இந்நூலை வெளியிடுகின்றோம். இதன்கண் ஏறக்குறைய ஓராயிரத்தைம்பது மரபுத்தொடர்களும், ஒலிக்குறிப்பாதிய தொடர்மொழிகளும் அடங்கியுள்ளன. இவற்றைக்கொண்டு நம் பண்டைய தமிழ்ச் சான்றோர்களின் அறிவும் ஆற்றலும் எத்துணைப் பெருமைவாய்ந்தவை யென்பதை உய்த்துணரல் எளிதாகும்.

தமிழிற் சொற்பொழிவு ஆற்றுவார்க்கும் திருந்திய உரைச் செய்யுள், பாச்செய்யுள் இயற்றுவார்க்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

இக் கழகத்தார் வெளியிட்டுள்ள ஏனைய நூல்களைப் போல மிகவும் எளிய விலைக்குக் கிடைக்கப்பெறும் இந்நூற் படிகளையும், பள்ளிக்கூட ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களை வாங்குமாறு தூண்டியும், தமிழ்ச்செல்வர்கள் நூற்றுக் கணக்காக வாங்கித் தமிழ்மக்கட்கு விலையின்றி வழங்கியும் எம் தமிழ்த்தொண்டைச் சிறக்கச் செய்யுமாறு அவர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தார்.

---

திருவரங்கனார் அச்சகம், சென்னை-600 013. (II/2)

# மரபுத்தொடர் அகரவரிசை

அகடவிகடம் - தந்திரம், தட்டு மாற்று

அகலக்கால் வைத்தல் - அளவு வரை) கடந்துபோதல்

அக்கரைப் பச்சை (தூரத்துப் பச்சை) - பொய்த்தோற்றம்

அக்குத் தொக்கு-ஒட்டுப்பற்று, தொடர்பு

அடங்காப் பிடாரி - எவர்க்கும் அடங்காதவன் (ள்)

அடரடி படரடி - பெருங்குழப்பம்

அடாதுடி - தீம்பு, தீச்செயல்

அடாபிடி - கொடுஞ்செயல்

அடிக்கொருகால் - அடிக்கடி

அடிச்சான் பிடிச்சான் வியாபாரம் - மேல்விழுந்து செய்யுங் கொடுஞ் செய்கை

அடிதடி, அடிபிடி - சண்டை

அடிதண்டம் பிடிதண்டம்-முழுமையாக வசப்பட்ட பொருள்

அடியடியாக - தலைமுறை தலைமுறையாக

அடுக்கடுக்காய்-வரிசை வரிசையாக

அடுக்குக் குலையல்-நிலையழிதல்

அண்டப் புரட்டன் - பெருந்தீயன்

அமளி பண்ணுதல் - சச்சரவு உண்டாக்குதல்

அமுது குத்துதல் - உறைமோர் பாலில் ஊற்றுதல்

அரங்கேற்றுதல்-புது நூல், நடனம் முதலியவற்றை முதன் முறை அவையில் ஏற்கச் செய்தல்

அரட்டல் புரட்டல் - நோய் முற்றலால் நிகழும் வலி.

அரிப்பரித்தல்-கொழித் தெடுத்தல்

அரைகுலையத் தலைகுலைய - மிக்க விரைவாய்

அரைகுறை - முற்றுப் பெறுமை

அரைப்படிப்பு - நிரம்பாக் கல்வி

அரைமனிதன் - மதிப்புக் குறைந்தவன்

அலக்கலக்காய், அலகலகாக - தனித்தனியாய்

அலக்கழித்தல் அலைக்கழித்தல் - அலைத்து வருத்துதல், கெடுத்தல்

அலைகுலையாக்குதல் - நிலை குலையச்செய்தல்

அல்லுச் சில்லுப்படுதல்-சிறிது சிறிதாகக் கெடுதல்

அல்லும் பகலும் - இரவும் பகலும்

அல்லோல கல்லோலம் - ஆரவாரம்

அவசரக் குடுக்கை - பதற்றக் காரன்

அவிழ்த்துக்கொடுத்தல் - சொந்தப் பொருளிலிருந்து எடுத்துக் கொடுத்தல்

அழித்தழித்து - திரும்பத் திரும்ப, மீண்டும் மீண்டும்

அழிவழக்கு - வீண் வழக்கு

அழுகள்ளன் தொழுகள்ளன் - பாசாங்கு செய்வோன்

அழுமூஞ்சி - பொலிவற்ற முக முள்ளவன்

அளப்பளத்தல் - அலப்புதல், முறு முறுத்தல்

அளப்பறிதல் - உட்கருத்தைத் தந்திரமாயறிதல்

அளவளாவுதல் - கலந்துபேசுதல்

அளவு படுத்துதல் - வரையறை செய்தல்

அள்ளாடித் தள்ளாடி - தளர்ந்த நடையாய்

அள்ளிக்கொட்டுதல் - மிகச் சம்பாதித்தல் (தேடுதல்)

அள்ளித் துள்ளுதல் - மிகச் செருக்குதல்

அள்ளியிறைத்தல் - அளவுக்கு மிஞ்சிச் செலவிடுதல்

அள்ளிவிடுதல் - ஏராளமாகக் கொடுத்தல்

அறக்கப்பறக்க - விழுந்து விழுந்து, விரைவாக

அறம்பாடுதல் - தீச்சொற்பட்டுத் தீப்பயனுண்டாகப் பாடுதல்

அறிதுயில் - யோக நித்திரை

அறிமுகம் - தெரிந்தமுகம், பழக்கம்

அறிவறிவாக - விளக்கமாக, தீர

அறுதியிடுதல் - முடிவுக்கு கொண்டுவருதல், தீர்மானித்தல்

அறுத்துக் கட்டுதல் - தாலி நீங்கிய பின் மறுதாலி கட்டி மணத்தல்

அறுப்புச் சுகம் - விதவைக்குக் கொடுக்கும் பொருள்

அறைகூவுதல் - போருக்கழைத்தல்

அறைமுறையிடுதல் - குறை தெரிவித்தல்

அற்றுப்போதல் - முழுதும் ஒழிதல், இடைமுறிதல்

ஆக்கங் கூறுதல் - ஆசி கூறுதல், வாழ்த்துதல்

ஆசாரக் கள்ளன் - ஒழுக்கமுள்ளவன்போல் நடிக்குங் கள்ளன்

ஆசை வார்த்தை நம்பிக்கையுண்டாகச் சொல்லுஞ்சொல்

ஆடைக்குங் கோடைக்கும் - எல்லாப் பருவகாலத்தும்

ஆட்கொள்ளுதல் - அடிமை கொள்ளுதல்

ஆணிக் கொள்ளுதல் - இருப்பிடத்தை நிலைபெறச் செய்து கொள்ளுதல்

ஆணித்தரம் - முதற்றரம்

ஆர்ப்பாட்டம் - ஆரவாரம்

ஆலாப்பறத்தல் - திண்டாடுதல்

ஆவிச் சேர்த்தல் - கட்டியணைத்தல்

ஆழம் பார்த்தல் - ஒருவனறிவு முதலியவற்றை ஆராய்தல்

ஆழும் பாழுமாய் - சீர்கேடாய், வீணாக

ஆறப்போடுதல் - காலந்தாழ்த்தல்

ஆறல் பீறல் - பயனற்றது

ஆற அமர - அமைதியாய்

ஆற்றமாட்டாமை - முடியாமை தாங்க முடியாமை

ஆற்றறுத்தல் - இடையிற் கைவிடுதல்

ஆற்றுப்படுத்தல் - வழிச்செலுத்துதல்

இசகு பிசகு, இசக்குப் பிசக்கு - முறை கேடு

இசை கேடு - சீர்கெட்ட நிலை

இசைவு கேடு - பொருந்தமின்மை, காரியக்கேடு

